# கல்கி

KALKI 25.3.90 ரூ. 2.50

"படத்துக்கு
ஒரு பாட்டாவது
கர்னாடக இசையில்
இருக்கக் கூடாதா?"

— ஜேசுதாஸ் பேட்டி



* நசித்த கலைக்குப் புத்துயிரூட்டிய படம்



* ரவி

# கரகாட்டக்காரன்; அபூர்வ சகோதரர்கள்- விருது பெறப்போவது எது?



* வெங்கடேஷ்

**சென்ற ஆண்டின் 'சிறந்த பொதுபோக்கு' திரைப்படத்துக்கான மத்திய அரசாங்கத்தின் விருதைப் பெற கரகாட்டக்காரன், அபூர்வ சகோதரர்கள் ஆகிய இரண்டு தமிழ்ப் படங்களும் போட்டியிடுகின் றன. இந்தப் போட்டியையொட்டி இங்கே மோதிக் கொள்பவர்கள்: கமல் ரசிகரான வெங்கடேஷ், ராமராஜன் ரசிகரான ரவி.**

வெங்கடேஷ்: கரகாட்டக்காரன் குருட்டு அதிர்ஷ்டத்தில் வெற்றி பெற்ற படம். இந்த அளவுக்கு வெற்றி பெறாமல் போயிருந்தால், கரகாட்டக்காரனைப் போட்டிக்கு அனுப் பும் ஐடியாவே சம்பந்தப்பட்டவர்களுக்கு வந்திருக்காது என்று கூடச் சொல்லலாம்.

ரவி: கரகாட்டக்காரன் படத்தை வெற் றிப் படம் என்று ஒப்புக் கொண்டதற்கு நன்றி. அந்த வெற்றி சாதாரணமானதல்ல. அபூர்வ சகோதரர்களை விட அதிக நாள் ஓடிய படம் கரகாட்டக்காரன் என்பதோடு வசூல் அடிப்படையில், தமிழ்த் திரையுலக சரித்திரத்திலேயே மாபெரும் சாதனை படைத்திருக்கிறது.

வெங்கடேஷ்: அபூர்வ சகோதரர்களில் கமலின் நடிப்பு அற்புதம். திரைக் கதையின் சுவாரசியமும், காமெடி கலந்த வசனங் களும் படத்தை விறுவிறுப்பாக்கின. அப்பு செய்கிற ஒவ்வொரு கொலையும் செமை திரில்லிங். ஹிட்ச் காக் படம் பார்ப்பது போன்றதொரு சஸ்பென்ஸ்! கரகாட்டக் காரன் படத்தில் என்ன இருக்கிறது? பழைய தில்லானா மோகனாம்பாளின் உல்டா தானே? அதிலே ஹீரோ நாதஸ்வர வித்வான்; ஹீரோயின் டான்சர். இதிலே இரண்டு பேருமே கரகாட்டம் ஆடுபவர்கள். வழக்கமான லவ் சப்ஜெக்ட்தான். வில்ல னின் தடைகளை மீறிக் கல்யாணம். அவ்வளவுதானே!

ரவி: ஏன்? அபூர்வ சகோதரர்களில் மட்டும் என்னவாம்? வழக்கமான பழிவாங் கும் கதைதானே? மேரா நாம் ஜோக்கரில் ராஜ்கபூர் பபூன் வேடம்தானே இதிலே கமலுக்கு! ஹீரோயின் தன்னைக் காதலிப்ப தாய் நினைத்துக் கொண்டிருப்பது; ஆனால் அவள் வேறு ஒருவரைக் காதலிப்பது; உண்மை வெளிப்படும் போது, பொங்கும் சோகத்தை வெளியே காட்டிக் கொள்ளாமல் இருப்பது... இது கூட ராஜ்கபூர் செய்தது



* பொழுதுபோக்கு படங்களிலேயே ஒரு கிளாசிக்

● பிரிட்டிஷ் கொலம்பியாவில் க்வாக்யு என்ற பூர்வீகக் குடிகள் தங்களுக்குப் பணம் கடனாகத் தேவைப்படும் போது தங்களது பெயரை அடமானம் வைக்கிறார்கள். கடனைத் திருப்பிக் கொடுக்கும் வரை கடன் வாங்கியவர் பெயரற்றவராகவே இருக்கிறார்!

— எஸ். முகம்மது யூசுப்.

தான். ஒரே ஒரு வித்தியாசமான அம்சம், குள்ளமான அப்பு!

வெங்கடேஷ்: படத்தில் முக்கியமான கேரக்டரே அப்புதானே! அதனை வெற்றிகரமாய்ப் படைக்க கமல் எத்தனை கஷ்டப்பட்டிருக்கிறார்? கடுமையான உழைப்பின் விளைவுதான் அபூர்வ சகோதரர்கள். பொழுதுபோக்குக்காகவே ஒரு சினிமா எடுக்க வேண்டும் என்று திட்டமிட்டுக் கவனமாய்த் தயாரிக்கப்பட்டது அபூர்வ சகோதரர்கள்.

ரவி: கரகாட்டக்காரனும் அப்படித்தான். தமிழ் நாட்டின் புராதனக் கலையான கரகாட்டம், இன்று மெல்ல அழிந்து வருகிறது. அந்தக் கலைக்கு ஒரு மறுமலர்ச்சி ஏற்படுத்த வேண்டும் என்கிற நல்ல நோக்கத்துடன் — அதே சமயம் பொழுதுபோக்கு அம்சத்தைப் பிரதானமாகக் கொண்டதாய் எடுக்கப்பட்டது. திரைப்படம் எடுப்பதற்கு முன்பு, மதுரைக்குப் போய், தொழில் ரீதியான கரகாட்டக்காரர்களை ஆட வைத்து, அதை வீடியோ எடுத்துக் கொண்டு வந்து, அந்த ஒன்பது மணி நேர வீடியோ கேசட்டை பல நாட்கள் படம் சம்பந்தப்பட்ட அனைவருமே திரும்பத் திரும்பப் போட்டுப் பார்த்து, பிராக்டீஸ் செய்து, அப்புறம்தான் படப்பிடிப்பு நடந்தது. கரகாட்டக்காரனின் வெற்றியும், உழைப்புக்குக் கிடைத்த பரிசு தான்.

வெங்கடேஷ்: மனத்தைத் தொட்டுச் சொல்லுங்கள். கரகாட்டக்காரன் நீங்கள் எதிர்பார்த்ததற்கு அதிகமாகவே ஓடியது, இல்லையா?

ரவி: ஆமாம்! படம் வழக்கத்தை விட அதிகமான இடங்களில் நூறு நாட்கள் போகும் என எதிர்பார்த்தோம். ஆனால் ரிலீசான எல்லா ஊர்களிலும் சக்கைப் போடு போட்டு விட்டது. மதுரையில் ஒரு தியேட்டரில் 365 வது நாளை நோக்கி ஓடிக் கொண்டிருக்கிறது!

வெங்கடேஷ்: ஆனால், அபூர்வ சகோதரர்களின் வெற்றி எதிர்பார்த்த வெற்றி; திட்டமிட்டுச் சாதித்த வெற்றி; வழக்கமான பழிவாங்கும் கதை என்றால், இரண்டாம் தடவை உட்கார்ந்து பார்க்க முடியாது. காரணம் சஸ்பென்ஸ் இருக்காது. ஆனால் அபூர்வ சகோதரர்கள் படம் திரும்பத் திரும்பப் பார்க்கத் தூண்டியது. அந்த அளவுக்குப் பல்வேறு அம்சங்களிலும் கவனம் செலுத்தி சிறப்பாகத் தயாரிக்கப்பட்டது.

ரவி: கரகாட்டக்காரனின் வெற்றிக்கும் ரிபீட்டட் ஆடியன்ஸ்தான் காரணம். ஒரு சிறு உதாரணம் சொல்லட்டுமா? தென்னார்க்காடு மாவட்டம் வடலூருக்குப் பக்கத்தில் ஒரு டூரிங் கொட்டகை. சுற்று வட்டாரத்தில் அனைத்து கிராமங்களையும் சேர்த்தாலும் ஜனத் தொகை இரண்டாயிரத்து ஐநூறைத் தாண்டாது. தியேட்டரில் ஒரு காட்சியை எழுநூறு பேர் பார்க்கலாம். நான்கு ஹவுஸ் ஃபுல் ஷோ போனால், அத்தனை ஜனங்களும் படம் பார்த்து விட முடியும். ஆனால் அந்த ஊரில் படம் நாற்பத்தைந்து நாட்கள் ஓடியது. அத்தனையும் ஹவுஸ் ஃபுல் காட்சிகள். அப்படியெனில் ஒவ்வொருவரும் எத்தனை தடவை படம் பார்த்திருப்பார்கள் என நீங்களே கணக்குப் போட்டுப் பார்த்துக் கொள்ளுங்கள். தமிழ் நாட்டில் வசூலில் புதிய சாதனை படைத்திருக்கிறது கரகாட்டக்காரன்!

வெங்கடேஷ்: பாட்டுகள் ஹிட்டானது தான் கரகாட்டக்காரனின் வெற்றிக்குக் காரணம்.

ரவி: பாட்டுகள் சூப்பர் ஹிட் ஆனது வெற்றிக்கு உதவியிருக்கலாம். ஆனால் இரண்டரை மணி நேரப் படத்தில் பாட்டுகள் இடம்பெறுவது பதினெட்டே நிமிடங்கள்தான் என்பதை மறந்து விடாதீர்கள்! பதினெட்டு நிமிடப் பாட்டுகளுக்காக மட்டும் இரண்டரை மணி நேரம் உட்கார்ந்து படம் பார்ப்பார்களா?

வெங்கடேஷ்: நடிப்பு என்று எடுத்துக் கொண்டால் கமலை, ராமராஜனால் பீட் பண்ண முடியாது!

ரவி: அப்படியென்றால் கமலுக்குச் சிறந்த நடிகர் விருது கிடைக்கட்டும். வாழ்த்துகிறேன். ஆனால் பொழுதுபோக்குப் படத்துக்கான விருது கரகாட்டக்காரனுக்குத் தான் கிடைக்க வேண்டும்!

வெங்கடேஷ்: பொழுதுபோக்குப் படங்களிலேயே அபூர்வ சகோதரர்கள் ஒரு கிளாசிக். அதற்குத்தான் விருது கிடைக்கும் பாருங்களேன்.

ரவி: நசிந்து போன ஒரு தமிழ் நாட்டுக் கலைக்கு புத்துயிர் அளித்த படம் கரகாட்டக்காரன். நிச்சயம் விருது கரகாட்டக்காரனுக்குத்தான்.

தொகுப்பு: **எஸ். சந்திரமௌளி**

படங்கள்: **யோகா**

# ரொம்பத்தான் மாறிவிட்டது டீ.வி!



* அட்டகாசமான வாக்கியின் உலகத்தை உருவாக்கியவர்.

முன்பெல்லாம் இப்படியில்லை. ஒவ்வொரு வாக்கியத்தையும் கண்களில் விளக்கெண்ணெயை விட்டுக் கொண்டு கவனித்தார்கள். வெட்ட வேண்டியதைத் தாட்சண்யமின்றி வெட்டினார்கள். எத்தனையோ நிகழ்ச்சிகளை இருட்டடிப்புச் செய்தார்கள். மிகப் பல தலைவர்களை இருந்த இடம் தெரியாமல் மறைத்தார்கள்.

'ஒருதலைப்பட்சமாக நடந்து கொள்கிறார்கள்' என்கிற கூக்குரல் நாடு முழுவதும் எதிரொலிக்கும் அளவுக்குச் செயல்பட்டார்கள்.

இப்போது?

'தன்னாட்சி' என்கிற ஒரு தத்துவத்தை மத்திய அரசு அறிவித்தாலும் அறிவித்தது, எல்லாமே மாறிவிட்டதைப் போலத் தோன்றுகிறது.

சமீபத்தில் ஆரம்பமாகியுள்ள ஒரு விளம்பரதாரர் தொடர் நிகழ்ச்சியை எடுத்துக் கொள்ளுங்களேன்.

பதினாறு வயது மகள் தன் தந்தையிடம் வாதாடுகிறாள். அவளுக்கு வோட்டுப் போடுவதற்கு வேண்டுமானால் வயது வராமல் இருக்கலாமாம். ஆனால் காதலிக்கவும், கர்ப்பம் தரிக்கவும் வயது வந்துவிட்டதாம். சொல்கிறாள்.

கர்ப்பம் தரிப்பதைச் சுற்றியே நடைபெற்ற மகள் — தந்தை விவாதம் ஏற்படுத்திய அதிர்ச்சி, ஒருபுறம் இருந்தாலும் காட்சிக்குக் காட்சி தன் முத்திரையைப் பதித்துள்ள அந்தப் பிரபல டைரக்டரின் திறமையை ரசித்து மகிழாமல் இருக்க முடியுமா என்ன?

ஒன்றரை அல்லது இரண்டாண்டுகளுக்கு முன்னர் ஒளிபரப்புவதற்கு ஏற்ற கதைகள் கோரப்பட்டன. அனேகமாக அனுப்பாதவர்களே கிடையாது. பத்துக் கதைகள், இருபது கதைகள் என்று அனுப்பியவர்களும் உண்டு. சுமார் மூவாயிரம், நாலாயிரம் கதைகள் அனுப்பப்பட்டதாக ஒரு கணிப்பு.

குழு ஒன்று அமைத்துப் பரிசீலித்துத் தேர்ந்தெடுத்துப் பதின்மூன்று வார நிகழ்ச்சிகளாக அளிப்பதாகத் திட்டம். குழு அமைந்ததா, பரிசீலித்தார்களா, தேர்வு செய்தார்களா என்பது பற்றியெல்லாம் வெளியிடவில்லை. மாறாக, 'ஒளிபரப்பு நேரமின்மை காரணமாகத் தங்கள் கதை ஏற்கப்படவில்லை. இந்த முடிவு தங்கள் கதையின் தரத்தைப் பற்றிய கணிப்பு அல்ல' என்கிற மாதிரி தொனிக்கும் கடிதங்களை மட்டும் அனைவருக்கும் அனுப்பியுள்ளதாகக் கேள்வி.

அதன் பிறகு ஒளிபரப்பு ஆகிறவை எல்லாமே பிரபலமானவர்களின் தயாரிப்புக்கள்தான். மகிழ்ச்சியோடு வரவேற்க வேண்டிய விஷயம்தான். அதற்காகக் 'கர்ப்ப



* அதிர்ச்சி ஒருபுறமிருந்தாலும் ரசிக்காமலிருக்க முடியுமா?



• உமா என்பது அய்யங்கார் பெயரா?

வயது' விவாதங்களையெல்லாம் அனுமதிக்க வேண்டுமா என்ன?

**இ**ந்தியில் என்ன செய்கிறார்கள் என்று தெரியவில்லை. இம்மாதிரியான வசனங்களை அனுமதிக்கிறார்களா, அல்லவா என்பதைப் புரிந்து கொள்ள முடியவில்லை. காரணம், மொழிப் பிரச்னை. ஆனால் இந்தி விளம்பரதாரர் நிகழ்ச்சிகளின் தயாரிப்புத் தரம் ஓகோ. பணச் செலவு பற்றிக் கவலைப்படுவதாகவே தெரியவில்லை.

சமீபத்தில் ஒளிபரப்பப்பட்ட இந்தித் தொடர்களில் ஹேமமாலினியின் 'நுபுர்' குறிப்பிட வேண்டிய ஒன்று. நாட்டியக் கலையின் பல்வேறு அம்சங்களைப் பிட்டுப் பிட்டு வைத்து விட்டார். தொடர் முழுதும் அவருடைய 'சின்சியரிடி' பளிச்சென்று வியாபித்திருந்தது.

மயிலாப்பூர் கௌரி அம்மாவைப் பற்றி அவர் குறிப்பிட்டது மனநிறைவு தந்தது. லயத்துக்குப் பந்தநல்லூர் என்றால் அபிநயத்துக்குக் கௌரி அம்மாவைத்தான் சொல்ல வேண்டும். 'சஞ்சாரி பாவ'த்தில் சாதனை படைத்தவர்: அவர் பெயரை அநேகமாக எல்லாருமே மறந்து போய்விட்ட நிலையில் 'நுபுர்' தொடரில் இடம் பெற்றது வியப்புக் கலந்த மகிழ்ச்சி.

இதற்கான 'கிரெடிட்' யாருக்கு? ஹேமமாலினிக்கா? அவர் அன்னை ஜெயா சக்கரவர்த்திக்கா?

அந்தத் தொடரிலும் இரண்டொரு நிரடல்கள்!

பொதுவாக இந்திப் படங்களில் தமிழ்நாட்டுப் பாத்திரங்களை இடம் பெறச் செய்து, தவறான — கொச்சையான இந்தி உச்சரிப்புடன் அவர்களைப் பேசச் செய்து நகைச்சுவை என்கிற பெயரில் சில காட்சிகளைப் புகுத்துவார்கள். ஹேமமாலினியின் தொடரில் சீரியஸான தமிழ்நாட்டுப் பாத்திரங்களை அதே முறையில் பேச வைத்தது ஏன்? 'யதார்த்தம்' என்பது பதில் என்றால் தமிழ்ப் பெண்ணான உமா (ஹேமமாலினி) சுத்தமான உச்சரிப்புடன் இந்தி பேசியது எப்படி?

இன்னுமொன்று. உமா என்பது அய்யங்கார்ப் பெயரா?

**கா**லை ஒன்பது முதல் பத்து மணி வரை அனைவரையும் வீட்டுக்குள்ளேயே கட்டிப் போட்டு வைத்துவிடும் பெருமைக்கு உரியது மகாபாரதம். (அதுவும் எப்படி? பிரதமர் வி. பி. சிங்கின் நிகழ்ச்சியொன்றின் நேரத்தையே மாற்றி வைக்க வேண்டியதாகிவிட்டதாம். ஒருவரும் வரமாட்டார்கள், கூட்டம் சேராது என்கிற பயம் ஏற்பட்டுவிட்டதாம் நிகழ்ச்சி அமைப்பாளர்களுக்கு.) அப்படிப்பட்ட மகாபாரதம் இப்போது ஒரே இடத்தில் தயங்கி நின்று விட்டதைப் போலத் தோன்றுகிறது. 'கீதோபதேசம்' தொடங்கியதிலிருந்து நிகழ்ச்சிகள்தாம் நகரவில்லையென்றால் காமிராவும் நகர மறுக்கிறது.

கிருஷ்ணரின் முன் காமிராவை ஸ்டாண்ட் போட்டு நிறுத்தி வைத்து, அவரை உபதேசம் செய்யச் சொல்லிவிட்டு ஒளிப் பதிவாளர் டிபன் சாப்பிடப் போய்விட்டார் போலிருக்கிறது!

**ஆ**ர். கே. லட்சுமணனை ஓகோவென்று பாராட்டுகிறார் நண்பர் ஒருவர். அவருடைய கற்பனையில் உருவாகி வரும் 'வாக்லேயின் உலகம்' அட்டகாசம் என்கிறார்.

'இந்தி யாருக்கய்யா புரிகிறது?' என்று கேட்டால், விடமாட்டேன் என்கிறார். 'இந்தி தெரியாதவர்கள் கூடப் புரிந்து கொள்ளும் அளவுக்கு உரையாடல் அவ்வளவு எளிமையாக இருக்கிறது' என்று கூறியதோடு நிற்காமல், 'இவ்வளவு யதார்த்தமாக, இவ்வளவு நகைச்சுவையோடு நிகழ்ச்சிகளைத் தயாரிக்க நம்மிடம் திறன் படைத்தவர்கள் இல்லாமலா போய் விட்டார்கள்? வெங்கட்டின் 'பெரிய மாப்பிள்ளை சின்ன மாப்பிள்ளை'க்கு என்ன குறைச்சல்?' என்று கேட்டார்.

கேட்டதோடு நிற்கவில்லை.

'இது மாதிரியெல்லாம் ஒளிபரப்புவதை விட்டுவிட்டு, கமலுக்கு ராதிகா ஒத்தடம் கொடுப்பதையெல்லாம் திரைத்துளியில் காண்பித்து இரண்டாவது சானலில் விரசத்துக்கு வழி வகுக்கிறார்களே!' என்று வேறு குறைப்பட்டுக் கொண்டார் அந்த விவரம் புரியாத மனிதர். இவர் புலம்பலைப் பற்றி யாருக்குக் கவலை? அது தெரியவில்லை அவருக்கு. சுத்தக் கட்டுப்பெட்டி.

கொசுறு: தமிழ்ச் செய்தி அறிக்கைகளில், 'துவங்கியது,' 'துவங்கியது' என்று அடிக்கடி வாசிக்கிறார்களே, அது சரியா? 'தொடங்கியது' என்று இருக்க வேண்டாம்? தமிழ் அறிஞர்கள் யாராவது தெளிவுபடுத்தினால்தான் தூக்கம் வரும் போலிருக்கிறது.

— கிச்சாமி



• சௌடாலா: புதிய ஆசை

# சௌடாலாவின் புதிய ஆசை!

○○ பாரதீய ஜனதா தலைவர் எல். கே. அத்வானியின் புகழ் இன்றைக்கு உச்சாணிக் கொம்பில் இருக்கிறது. மூன்று மாநிலங்களில் அமைச்சரவை; இன்னும் இரண்டு மாநிலங்களில் ஜனதா தளத்துக்கு ஆதரவு கொடுக்கும் நிலை. இருந்தும் துளியும் அகம் பாவம் தெரியவில்லை இவரிடம். நிதானம் இழக்காத மனிதர் என்றால் அத்வானிதான் என்கிறார்கள். வி. பி. சிங் வீட்டில் நடக்கும் வாராந்தர டின்னர் மீட்டிங்கில் யார் இருந்தாலும் இல்லாவிட்டாலும் இந்த 'வலது சாரி'யும் மார்க்ஸிஸ்ட் ஹர்கிஷன் சிங் சுர்ஜீத்தும் நிச்சயம் உண்டாம்.

○○ ஆர். கே. தவானைக் கண்டு நடுங்கிய காலம் மலையேறிவிட்டது. சரத்பவார், மந்திரிசபை அமைக்கும் விஷயமாக, காங்கிரஸ் தலைவர் ராஜீவைச் சந்திக்கத் தில்லி போனார். 'தவானை முதலில் பார்த்து விடுங்கள்!' என்று யோசனை கூறப்பட்டதாம். 'ராஜீவ் காந்தியைத் தவிர வேறு குமாஸ்தா யாரையும் பார்க்கும் உத்தேசம் இல்லை!' என்று காட்டமாக மறுத்துவிட்டாராம் பவார்!

○○ மேஹம் தேர்தல் புகழ் ஓம் பிரகாஷ் சௌடாலாவுக்குப் புதிதாக ஓர் ஆசை பிறந்திருக்கிறது: பத்திரிகை ஆசிரியராக வேண்டுமாம் அவருக்கு! 'விசுவ மானவ்' என்ற இந்தி தினசரியை விலைக்கு வாங்க பேரம் பேசிக் கொண்டிருப்பதாகக் கேள்வி. தேர்தலின் போது தமக்குப் பத்திரிகைகள் எல்லாம் எதிராக இருப்பதாகப் புகார் சொன்னாரே. அதனால் தமது புகழ் பாட ஒரு பத்திரிகையைத் தமக்கே சொந்தமாக்கிக் கொண்டுவிட்டால் என்ன என்ற திட்டம் போலிருக்கிறது!

○○ 'முஸஃப்பர்பூருக்கு பம்பாயிலிருந்து நேரடி ரயில் விடப் போகிறீர்களா என்ன?' என்று ஜார்ஜ் ஃபெர்னாண்டஸைப் பத்திரிகை நிருபர்கள் ஒரு கூட்டத்தில் குடைந்து எடுத்தார்களாம். காரணம், தங்கள் தொகுதிக்கு ரயில் விடாத ரயில்வே அமைச்சர் யார் தான் இருந்திருக்கிறார்கள்? காசிக்கு — கமலபதி திரிபாதி; குவாலியருக்கு — சிந்தியா; மால்டாவுக்கு — கனிகான் சவுத்ரி; சமஸ்திபூருக்கு — எல். என். மிச்ரா....

○○ மணி சங்கர் அய்யருக்கு ராஜ்ய சபா எம்.பி.பதவி கிடைக்க அ.இ.அ.தி.மு.க.வை நாட மாட்டார்கள் என்று தோன்றுகிறது. 'ஆந்திர முதல்வர் சென்னா ரெட்டியிடம் பேசிப் பாருங்கள்' என்று உதவியாளரிடம் ராஜீவ் சொல்லியிருக்கிறாராம்!

தொகுப்பு: சித்தார்த்



• ஃபெர்னாண்டஸ்: தொகுதிக்கு ரயில்?



• அத்வானி: புகழின் உச்சியில்



• பவார்: காட்டமான மறுப்பு



• மணி சங்கர் அய்யர்: எம். பி. பதவி







திருவான்மியூர் வால்மீகி நகரில், கடற்கரையை அடுத்து இருக்கிற வீதிகளில் ஒன்றில், அமைதியான வீடு. காம்பவுண்டுக்குள் மாட்டுத் தொழுவம்; வெளியே படுத்திருக்கும் பசு. நுழையும் போதே தம்பூராவின் ரீங்காரமும், அதில் இணைந்து எழும் மென்மையான இசையும் வெளியே மெலிதாகக் கேட்கின்றன. அந்தப் பாட்டு முடியும் வரை காத்திருக்கிறோம். பிறகு நமது கேள்விகளுக்குப் பதில் சொல்லத் தொடங்கினார் ஜேசுதாஸ்:

● கர்நாடக இசை — மெல்லிசை — உங்களைப் பொறுத்தவரை, உங்களுக்கு எதில் அதிக விருப்பம்?

இரண்டுக்கும் பெரிய வித்தியாசம் எனக்குத் தோன்றவில்லை. சங்கீதம்னா சங்கீதம்தான். கர்நாடக சங்கீதத்துக்குப் பயன்படுத்துகிற அதே கமகங்கள், வைப்ரேஷன்ஸ் எல்லாம்தான் இதுக்கும் உபயோகிக்கிறோம். அதுல சில வித்தியாசம் இருக்குமே தவிர, எல்லாவற்றுக்கும் அடிப்படை கிராமிய இசைதான். மனிதன் காட்டில் பிறந்து இயற்கையோட வாழ்ந்து கொண்டிருந்தான்... படிப்படியா வளர்ந்தான். நாம் இப்போது பேசிக் கொள்கிற அளவுக்கு பாஷை வந்தது. அதுக்கு முன்னால் கிளியோட சத்தம், மிருகங்களோட சத்தம் எல்லாவற்றோடும் வளர்ந்தான். குழந்தையைத் தூங்க வைக்கிற தாலாட்டுப் பாட்டெல்லாம் வந்தது. அம்மாக்கள் எல்லாம் படித்து வைத்துக் கொண்டா பாடினார்கள்? தெம்மாங்குப் பாட்டெல்லாம் இருந்ததே, மியூசிக் அகாடமியில் போய்ப் படித்தா பாடினார்கள்? இதுக்கெல்லாம் ஸ்வரம் போட்டு இம்ப்ரொவைஸ் பண்ணினார்கள். இப்போ சயன்ஸ் ஆகிவிட்டது. எந்த ஒரு ஓசையிலும் ஸ்வரம் நோட் பண்ண முடியும். எங்களுக்கு, எல்லாமே சங்கீதம்தான். இதுலே குறை, அதுலே குறை என்றெல்லாம் சொல்லிக் கொண்டிருக்க முடியாது.

● குருவாயூர் கோயில் சந்நிதியில் நீங்கள் பாட முடியாது போனது பற்றி உங்களுக்கு வருத்தமில்லையா?

இல்லே.... ஆனா இந்த விஷயம் இன்னும் டிஸ்கஷன்ல இருக்கு. அப்போ குருகூட போயிருந்தேன். தயங்கிய என்னை, 'இல்லேடா, என்கூட வா நீ!' என்றார். அவர் ஒரு நம்பிக்கையோட வந்தார். அப்போது நிலைமை சரியாக இருக்கவில்லை. அவருக்கு ரொம்ப வருத்தமாயிருந்தது. வெளியே ஸ்டேஜ் போட்டார்கள். ஏராளமான ஆடியன்ஸ் இருந்ததுனால வெளியே வைக்கறோம் என்று சாமர்த்தியமாகச் சமதானமும் சொன்னார்கள்!

● அப்போ செம்பை இசைவிழாவில் நீங்கள் பாடுவதில்லையா?

இதற்கு நாம் யாரையும் குறை சொல்ல முடியாது. நிலைமையைப் பொறுத்து இருக்கிறது. இப்போது ஆடியன்ஸ் விருப்பம்; புரோட்யூசர் பணம் செலவு செய்கிறார் — இவர்களோட விருப்பம் எல்லாம் பார்க்க வேண்டும். இதிலேஎல்லாம் கல்ச்சர் இல்லையேன்னு சொல்லிப் பிரயோசனம் இல்லை. கதைகளைத் தேர்ந்து எடுக்கறதும் ஒரு காரணம். பாங்க் கொள்ளை, கிளப் டான்ஸ் இதிலே எல்லாம் கர்நாடக இசை வரணும்னா எப்படி? சங்கராபரணம், சிந்துபைரவி மாதிரி எப்பவும் எடுக்க முடியாதே? ஆடியன்ஸ்தான் மாற்றணும். கேரளாவிலும் இப்போது அப்படித்

# "படத்துக்கு ஒரு பாட்டாவது கர்நாடக இசையில் இருக்கக் கூடாதா?"

## —ஜேசுதாஸ் பேட்டி

அதெல்லாம் உள்ளேதானே நடக்கிறது! நான் போக முடியாதே! எல்லா மதத்தினரிடமிருந்தும்தான் கோயிலுக்கு டொனேஷன் வாங்குகிறார்கள். அப்போது வித்தியாசம் பார்ப்பதில்லையே?... ஓர் இடத்தில் வர வேண்டாம் என்றால் போகவா போவோம்? உள்ளே வரக்கூடாது என்று வீட்டுக்காரர் சொன்னால் நாம் போவோமா? வீட்டுக்காரர்சொல்லவில்லை,வாட்ச்மேன்சொல்லுகிறார்..... இப்போ சர்ச்சுகளில் எல்லா இந்துக்களையும் அனுமதிக்கிறார்கள்... தேவஸ்வம்போர்ட்டுக்கும் அரசுக்கும் இந்த விஷயமாகப் பேச்சு வார்த்தை நடந்து கொண்டிருக்கிறது. இன்னும் முடிவு தெரியவில்லை.

● தமிழ்த் திரைப்பட உலகில் உங்கள் நிலை என்ன?

என்னோட நிலையைக் கேட்கிறவர்கள் தான் சொல்லணும்! என்னோட டேஸ்ட்டுக்குத் தகுந்த மாதிரி பாட்டுக்கள் இல்லை. என்னோட டேஸ்ட்டுன்னா கொஞ்சம் கிளாசிகல்.... கொஞ்சம் மெலடி இருந்தாத்தான் எனக்குப் பிடிக்கும். வேறு பாட்டுகளும் பாட முடியும். ஆனால் அதைப்பாட நிறைய இளைஞர்கள் இருக்கிறார்கள். அவர்களுடன் நானும் போட்டி போட வேண்டுமா என்ன?

● ஆனால் மலையாளத் திரைப்பட இசை போல, தமிழ்த் திரைப்பட இசையில், கர்நாடக இசையின் பாதிப்பு இல்லையே?

தான் போய்க் கொண்டிருக்கிறது. தேவராஜன் மாஸ்டருக்கும், தட்சிணாமூர்த்தி சாருக்கும் படமே இல்லையே? இளைஞர்கள் வந்து பாப் மியூசிக் கலந்து கொடுக்கிறார்கள். அதில் தப்பே இல்லை. இப்போது என்னால் பாட முடியாது என்று சொன்னால், இன்னொருவர் வந்து பாடுவார், அவ்வளவுதான்... ஒரு நல்ல பாடகர் எல்லாமும் பாடணும். அதுக்குத் தகுந்த மியூசிக் டைரக்டர், அதுக்குத் தகுந்த பாடலாசிரியர் — இந்த மாதிரி போய்க் கொண்டிருக்கிறது. தத்துவங்கள் எல்லாம் போய்விட்டது. அது குறை என்று சொல்ல முடியாது. ஆடியன்ஸுக்கு அதுதான் வேண்டியிருக்கிறது. 'ஹவ்வா ஹவ்வா ஹில்வவ்வா' என்று இப்போ பாடுகிறார்களே, அதுமாதிரி நம் பசங்களும் பாடுகிறார்கள்! வெளியே இருக்கட்டும். இங்கே என் வீட்டில், என் பிள்ளைகள் அதைத்தானே பாடுகிறார்கள்! ஏன் என்றால் அவர்களுக்கு ஈஸியாக இருக்கிறது. இப்போது கர்நாடக சங்கீதக் கச்சேரி கேட்கிறவர்களே கூட ஒரு சில ராகங்களைத் தானே ரசிக்கிறார்கள்? சில அபூர்வ ராகங்கள் பாடினால் ரசிக்கிறதில்லை. அது ஏன்? பழக்கமில்லை! வெஸ்டர்ன் மியூசிக் இருக்கட்டும். ஆனால், படத்துக்கு ஒரு பாட்டாவது கர்நாடக இசையில் இருக்கக் கூடாதா? இதுதான் என் கேள்வி. எனக்காக ஆசைப்பட்டுச் சொல்லவில்லை. பத்துப் பையன்களுக்கு டியூஷன் சொல்லிக் கொடுத்துக் கூட நான் பிழைத்துக் கொள்வேன்! சங்கீதத்துக்கு மதிப்புக் கொடுக்கணும். ஒரு கிளாசிகல் சாங் வந்தா படம்

ஒன்றும் நாசமாகப் போகப் போவதில்லையே!

● அன்றைக்கு எம். எஸ். வி. போட்ட மியூசிக்கை இப்போதும் ரசிக்க முடிகிறது. ஆனால் இப்போது வருகிற படங்களில் அடுத்த படம் வருகிற வரை கூடப் பாடல்கள் நினைவில் இருப்பதில்லை....

இளையராஜாவுக்குக் கிளாசிகல் மியூசிக், வெஸ்டர்ன் மியூசிக் இரண்டுமே தெரியும். நம்பர் ஒன் மியூசிக் டைரக்டர். இன்றைக்கு, உலகத்தில் இருக்கிற சிறந்த மியூசிக் டைரக்டர்களில் ஒருவர். அவர் சிச்சுவேஷனுக்குத் தகுந்த மாதிரி மியூசிக் போட்டுக் கொடுக்கிறவர். டைரக்டர் எப்படிக் கேட்கிறாரோ அப்படி. இன்றைக்கு ராஜா, 'அப்படி நான் மியூசிக் போட மாட்டேன்' என்று சொன்னால், அவர் ஃபீல்டுலே இருக்கமாட்டார். கிளாசிகல்தான் என்னால போட முடியும் என்றால் அவரை யாரும் கூப்பிட மாட்டார்கள். அவர் அந்த மாதிரி மியூசிக் போடுவதால்தான் 'மாஸ்' என்கிற சாதாரண மக்களைக் கவர முடிகிறது. நாமா தியேட்டருக்குப் போய்ப் படம் பார்க்கிறோம்? சாதாரண மக்கள், பாமர மக்கள்தானே ஒரு ரூபாய், இரண்டு ரூபாய் செலவழித்துப் படம் பார்க்கிறார்கள்! ஆக, அவனுக்கு வேண்டியதையும் தரணும்; அவனை உயர்த்தவும் செய்யணும். கேட்பதற்கு ஆளில்லை என்றால் நம் ஞானத்தை வைத்துக் கொண்டு என்ன செய்வது? அதனால்தான் கிளாசிகலுக்கும் சிறிது இடம் கொடுங்கள் என்று நான் புரொட்யூசர்களைக் கேட்கிறேன்.

● ரிக்கார்டிங், கச்சேரி, வெளியூர்ப் பயணம் என்று மிகவும் 'டைட் ஷெட்யூல்' வைத்துக் கொண்டிருக்கிறீர்கள். எப்படி சாதகம் செய்கிறீர்கள்?

எனக்கு இருபத்து நான்கு மணி நேரமும் சங்கீதம்தான் சிந்தனையே. வேறு எதிலும் என் கவனம் இல்லை. புத்தகம் படிப்பேன். ஆனா சங்கீதம்தான் எனக்கு முக்கியம். வெற்றிலை, சீவல், சிகரெட், டிரிங்க்ஸ் எந்தப் பழக்கமும் கிடையாது.... ஓரளவுக்கு ஞானம் இருந்தால், விட்டுவிடக் கூடாது. சிரத்தையோடு பிராக்டிஸ் பண்ண வேண்டும். நல்ல குருவைத் தேட வேண்டும். கர்நாடக சங்கீதம் கற்றுக் கொள்கிறேன் என்று சொல்லிவிட்டு, யாரிடமாவது போய் நிற்கக் கூடாது. பாட்டு சுகமாக இருக்கிறதா? சாஸ்திரம் தேவைதான். ஆனால் அதுவே சங்கீதம் ஆகிவிடாது. இனிமை முக்கியம். காதுக்குக் கேட்க இனிமையாக, இதமாக இருக்க வேண்டும். கர்நாடக சங்கீதம் என்றால் ஏதோ பெங்களூர் — மைசூரிலிருந்து வந்தது அல்ல. கர்ணத்துக்கு (காதுக்கு) அடகமானது (இனிமையானது)!



ராபின்மெய்ன்

## ராபின்மெய்ன் வழக்கு:

# அப்புறம் என்ன ஆச்சு?

வங்கிகளின் மானேஜர்களிடம் சென்று, 'தமிழக அரசின் விவசாயத் துறை மற்றும் அதன் கீழ் உள்ள நிறுவனங்களின் டெபாஸிட்டை உங்கள் வங்கியில் போடச் செய்கிறேன்; பதிலுக்கு நீங்கள் எனக்கு லாரிகள் வாங்கக் கடன் தர வேண்டும்' என்று கேட்டுக் கொள்வார் ராபின்மெய்ன். அப்போதைய அமைச்சர் காளிமுத்து தமது நண்பர் என்று சொல்லிக் கொண்டு, அந்தச் செல்வாக்கைப் பயன்படுத்தி டெபாஸிட் வாங்கிக் கொடுத்துக் கடனும் பெற்றுக் கொள்வார். ஆனால் லாரிகள் வாங்க மாட்டார். போலி ஆர். சி புத்தகங்களைத் தயாரித்து, வங்கி மானேஜரிடம் காண்பிப்பார். கிட்டத்தட்ட ஒரு கோடி ரூபாய் வரை இப்படிக் கடன் வாங்கி, பதின்மூன்று வங்கிகளை இந்த முறையில் ஏமாற்றினார் ராபின் மெய்ன் என்பது குற்றச்சாட்டு. இதை விசாரித்த சி. பி. ஐ., ராபின் மெய்ன், முன்னாள் அமைச்சர் காளிமுத்து, அவரது உதவியாளர் மாணிக்கம் ஆகியோரின் மேல் வழக்குப் பதிவு செய்தது. 1987ம் வருடம் செப்டம்பர் மாதம் சென்னை எழும்பூர் 10வது பெருநகர மாஜிஸ்திரேட் கோர்ட்டில், சி.பி.ஐ. குற்றப்பத்திரிகை தாக்கல் செய்தது. என்ன காரணமோ, வழக்கு 'கோமா'வில் கிடக்கிறது. இதற்கிடையில், ராபின் மெய்ன், மாணிக்கம் ஆகியோர் ஜாமீனில் வெளியே வந்து விட்டார்கள்!

— கௌசல்யா.



# N.S.K. பில்டர்ஸ்

ஸ்ரீலஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் ஸ்ரீ சங்கராச்சாரியார்கள் அவர்களின் அருளும் ஆசியும் பெற்று, இந்தியாவிலேயே முதன்முறையாக N.S.K. நிறுவனங்கள் இணைந்து அளிக்கும் ஒரு புரட்சிகரமான திட்டம்.



## "உங்களுக்கென்று ஒரு வீடு"

சிறப்பம்சங்கள்:

1. உங்களின் சிறு முதலீடு உங்களுக்கென "ஒரு வீட்டை" உருவாக்குகின்றது.
2. இத்திட்டத்தின் தவணை காலங்கள்:
   (a) குறுகிய காலம் — 50 மாதங்கள்; (b) நீண்ட காலம் — 100 மாதங்கள்
   * மாத தவணை ரூ. 100/-; ரூ. 250/-; ரூ. 500/-; ரூ. 1,000/-; ரூ. 2,000/-
3. வீடு கட்டும் தொகைக்கு பின்வரும் காலங்களில் வட்டியும், பிணையமும் (SURETY) கிடையாது.

இத்திட்டம் நடுத்தர மக்கள், மாத சம்பளம் உடையவர்கள், தொழிலாளர்கள், சிறு வியாபாரிகளுக்கென்றே உருவான திட்டமாகும். மேலும், இத்திட்டத்தின் சிறப்பு அம்சங்களையும் செயல் முறை விவரங்களையும் அறிய அணுகவும்.

**N.S.K. பில்டர்ஸ், சென்னை-17.**

---

## N.S.K. சிட் பண்ட்ஸ் (பி) லிமிடெட்

8வது ஆண்டு விழா காலத்தில் உங்களுக்கு தேவையான குறுகிய காலம், நீண்ட காலம் சீட்டுகள் சேர்ந்து பரிசுகள் வாங்கி பயனடையவும்.

## N.S.K. பைனான்சியர்ஸ்

1.3.90 முதல் 30.4.90 வரை ஏற்கப்படும் அனைத்து டெபாசிட்டுகளுக்கும் விழா காலத்தை முன்னிட்டு கவர்ச்சிகரமான வட்டி விகிதங்கள்:

| ஆண்டுகள் | 1 வருடம் | 2 வருடங்கள் | 3 வருடங்கள் |
|---|---|---|---|
| வட்டி விகிதம் | 18% | 20% | 24% |

அளிக்கப்படுகின்றது. குறைந்த அளவு டெபாசிட் தொகை ரூ. 5,000/-
3 வருட டெபாசிட்டுகளுக்கு அன்பளிப்பு வெள்ளி ஜோதி (Silver Lamp) (அ) குவார்ட்ஸ் வால்கிளாக் (Quartz Wall Clock)

## CUMULATIVE DEPOSIT SCHEME:

உங்களுடைய டெபாசிட் "42" மாதங்களில் இரட்டிப்பாகிறது
(உம்) ரூ.5,000/-42 மாதங்களில் ரூ.10,000/-மாக இரட்டிப்பாகிறது.

N.S.K. குரூப் நிறுவனங்களில் சீட்டுகள் சேர்ந்தும், டெபாசிட்டுகள் செய்தும் "உங்களுக்கென ஒரு வீடு" திட்டத்தில் இணைந்தும் பயனடையுமாறு கேட்டு கொள்கின்றோம்.

அணுகவும்:
**N.S.K. பில்டர்ஸ்**
38-B பர்கிட் ரோடு,
தி. நகர், சென்னை-17
போன்: 445252, 442950, 442106

பம்பாய் அலுவலகம்:
**N.S.K. ரியல் எஸ்டேட்**
"நவ்வுரங்",
நெ. 2/298, சுபாஸ் நகர்,
செம்பூர், பம்பாய்-71. போன்: 5552777

EXELADS/NSK522/90

● நீங்கள் ஏன் மியூசிக் டைரக்ஷன் பண்ணுவதில்லை?

முன்னால் பண்ணியிருக்கிறேன். 'ஆப் ஜைசா கோயிரே' பாட்டு 'அப்பர் நோட்'. நான் அப்படியே 'லோயர் நோட்'டில் பண்ணினேன். அது 'ஹிட்'டும் ஆயிற்று. அப்புறம் விட்டுவிட்டேன். ஏனென்றால் சினிமாவுக்கு ஏற்ப இறங்கி வருவது எனக்கு கஷ்டமாக இருக்கிறது. மற்றவர் இசை அமைப்பில் பாடி விடலாம். ஆனால் நாமே இசை அமைக்கும்போது 'அது கூடாது, இது கூடாது' என்று தோன்றுகிறது. ஒரு கிளாசிகல் வழியில் நான் வந்துவிட்டதால் இந்தச் சிரமம் ஏற்படுகிறது.

● திரைப்படம் தயாரிக்கும் ஆசை இல்லையா?

இருக்கிறது. மியூசிகல் தீம். கர்நாடகத்தில் போய், முதலில் கன்னடத்தில் எடுக்க வேண்டும்.... இந்த வருடம் அநேகமாகச் செய்ய முடியும் என்று நினைக்கிறேன்.

● குரல் வங்கி ஆரம்பிக்கப் போவதாகச் சொன்னீர்களே?

ஒரு செலக்ஷன் வைத்துத் தேர்ந்து எடுக்கப் போகிறோம். 40 வயது, 50 வயதுக்காரர்கள் எல்லாம் இதில் சேரலாமா என்று கேட்டு வருகிறார்கள்! நீங்கள் விளக்கமாக எழுதினால் நல்லது: பெண்களில் 15 முதல் 18 வயது: ஆண்களில் 16 முதல் 22 வயது வரை. ஓர் இடத்தில் இவர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். தயார் பண்ணி வைத்து விட்டால் 'டிராக்'கில் பாடிப் பழக்கமாகி விடும்.

● நேரு நூற்றாண்டு விழாவின் போது ராஜீவ் காந்தி முன்னால் பாடினீர்களே? பிறகு அவருடன் பேசினீர்களா?

ராஜீவ் மட்டுமல்ல, ஜனாதிபதி வெங்கட்ராமன், அமைச்சர்கள்.... எல்லோருமே வந்து பாராட்டினார்கள். நான் அங்கே பாட முக்கிய காரணம், பிரசிடெண்ட்தான். திருவனந்தபுரத்தில் 'சூர்யா' விழாவில் நான் பாடியதைக் கேட்டார். ரசித்தார். அவர்தான் இந்தக் கச்சேரி ஏற்பாடு செய்யக் காரணம் என்று நினைக்கிறேன்.

● மதம் ஒரு தனிமனிதன் சம்பந்தப்பட்டது; அவனுக்கு அதில் நம்பிக்கை இருக்கும் பட்சத்தில் வேறு யாரும் அதில் குறுக்கிடலாகாது என்று உங்கள் மகன் 'பாப்டிஸம்' சமயத்தில் சொல்லியிருந்தீர்கள். உங்கள் எண்ணத்தைக் கொஞ்சம் விளக்க முடியுமா?

மனிதனுக்கு மதம் தேவைதான். ஏனென்றால் இவனுக்குத் தெரியாத விஷயங்கள் நிறைய இருக்கும். அவற்றுக்கு எல்லாம் விளக்கங்கள் காண, சில புத்திசாலிகள் சேர்ந்து உருவாக்கினதுதான் மதம். போக வேண்டிய திசை தெரியாமல் ஓர் இடத்தில் வந்து நின்று விடுகிறான் ஒருவன். அவனுக்கு வழி காட்டி, விளக்கங்கள் தரத்தான் மதம் இருக்கிறது.

கிறிஸ்தவர்கள் 'யஹோவா' என்கிறார்களே, 'யஹோவா' என்பது 'அல்ட்டிமேட்.' அறுதி. இந்துக்கள் பரப்பிரம்மம் என்கிறார்கள். இந்தப் பரப்பிரம்மம் நமக்குள்ளேயே இருக்கிறது. இதையேதான் முஸ்லிம்கள் அல்லா என்று சொல்லுகிறார்கள். பெயரில்தான் மாறுபடுகிறது. எல்லாம் ஒன்றுதான்! இதில் போய்ச் சண்டை போடுவதில் என்ன அர்த்தம் இருக்கிறது என்று எனக்குப் புரியவில்லை.

ராமஜென்ம பூமி விஷயத்தையே எடுத்துக் கொள்ளுங்கள்..... பெரிய சர்ச்சையாகி விட்டது. அதில் என்னுடைய கருத்தைச் சொல்லுகிறேன். (அமர கோசம் என்கிற தடிமனான நூலை எடுத்து வைத்துக் கொள்ளுகிறார்; பிரித்து — ) இதைப் படிக்கிறேன், கேளுங்கள்:

கிருத யுகம் 17,28,000 வருடங்கள்.
திரேதா யுகம் 12, 96,000 வருடங்கள்.
துவாபர யுகம் 8, 64,000 வருடங்கள்.
கலியுகம் 4, 32,000 வருடங்கள்.

இப்போது கலியுகத்தில் இரண்டு லட்சத்துச் சொச்சம் வருடங்கள் முடிந்துவிட்டதாகச் சொல்லுகிறார்கள். ஸ்ரீராமர் காலம் துவாபர யுகம். ஆக, சராசரியாக எட்டு + இரண்டு = பத்து லட்சம் வருடங்களாகவா அந்த இடம் அப்படியே இருக்கிறது? பத்து லட்சம் வருடத்துக்கு முன்னால் நடந்த விஷயத்துக்கு இப்போது சண்டை போட்டுக் கொள்ள வேண்டுமா? ஸ்ரீராமர் எங்கேயும் இருக்கிறார். அவருக்கு எங்கே வேண்டுமானாலும் கோயில் கட்டலாம். எதற்கு இந்த வீண் சண்டை?

● நீங்கள் ஒரு முறை, தண்ணீர்ப் பிரச்னையில் உண்ணாவிரதம் இருக்கப் போவதாகச் சொன்னீர்களே?

நான் என் வீட்டிலேயே உண்ணாவிரதம் இருந்தேன். கூட ஓர் ஆள் கூட இல்லை. எனக்கு போன் பண்ணிக் கேட்கக் கூட இல்லை. அதற்கு முன்னாலும் சரி, பின்னாலும் சரி. கூப்பிட்டுத் திட்டியிருந்தால் கூடப் பரவாயில்லை! மக்களுக்கு பொதுப்பிரச்னைகளில் அக்கறை இருப்பதில்லை. அப்புறம் எனக்கு மட்டும் என்ன வந்தது? எல்லா ஊரிலும்தான் தண்ணீர்ப் பிரச்னை இருக்கிறது. மழைக் காலத்தில் தண்ணீர் கடலுக்குப் போகாமல் இருக்க ஏன் நடவடிக்கை எடுப்பதில்லை? இந்த ஐந்து வருடம், பத்து வருடம் பிளானிங்கில் கோடிக் கணக்கான ரூபாய் செலவழிக்கப்படுகிறது. இருந்தும் என்ன?

இங்கே வறட்சி; அங்கே பெரு வெள்ளம். மாற்றி மாற்றி, வருடா வருடம் இதேதான்! இங்கே நமக்கு எல்லாமே பாலிடிக்ஸ்தான். ஏழை இருந்தால்தான் அரசியல் நடக்கும். கல்வி இல்லை என்றால்தான் அரசியல் நடக்கும். நிரந்தரமான தீர்வு என்பது அரசியலுக்கு ஆகவே ஆகாது போலிருக்கிறது!

● உங்கள் உச்சரிப்புப் பற்றி வைரமுத்து குறிப்பிட்டிருக்கிறாரே?

நான் தமிழன் அல்ல. கேரளத்தில் பிறந்து வளர்ந்தவன். இருந்தாலும் கஷ்டப்பட்டுப் படித்துத் தெரிந்து கொள்கிறேன். 'வெள்ளம்' என்று நான் சொல்லுவது உங்களுக்கு 'வெல்லம்' என்றா கேட்கிறது? இதுதான் பிரச்னை. பாலசந்தர் படத்தில் கூட, நான் பாடியது சரியாகத்தான் இருந்தது என்றார்கள் ரிகார்டிங் முடிந்ததும். இவர் மட்டும்தான் ஒப்புக் கொள்ளவே இல்லை. சரி, சரியாகச் சொல்லித் தாருங்கள். நான் கற்றுக் கொள்கிறேன். அதை விட்டு விட்டு, அதையே ஒரு சர்ச்சையாக்கினால் எப்படி?

● கல்யாணக் கச்சேரியில் பாடும் போது உங்கள் மனநிலை எப்படி இருக்கும்?

நான் கல்யாணக் கச்சேரிகளில் சென்று பாடும் போது, அனைவரும் நமது கச்சேரியை ரசிக்கிறார்கள் என்று நினைப்பதில்லை. கல்யாணத்தில் கச்சேரி வைப்பதென்பது கல்யாண வீட்டுக்காரர்களுக்கு கௌரவம். அதே மாதிரி நாங்கள் அங்கே தொடர்ந்து இரண்டு மூன்று மணி நேரத்திற்குச் சாதகம் செய்யக் கிடைத்த வாய்ப்பு என்றே நினைத்துக் கொண்டு பாடுகிறோம். சாதகம் செய்வதற்குப் பணமும் கிடைக்கிற போது விடுவானேன்! (சிரிப்பு!)

**வி**டைபெறுமுன் நீண்ட நாட்களாக ஜேசுதாசின் வீட்டில் இருந்து வரும் வைணவப் பெரியவரைப் பற்றிக் கேட்டோம்.

''அவரா? அவர்தான் பல்லவி நரசிம்மாச்சாரியார். 'நான் எங்கும் போக விரும்பவில்லை. உன்னுடனேயே இருந்து கொண்டு, எனக்குத் தெரிந்ததை உனக்காவது சொல்லித் தருகிறேன்' என்று இங்கேயே தங்கிவிட்டார். அவரையும் பாருங்கள்!'' என்று அவருக்காகக் கொடுக்கப்பட்டிருக்கும் அறைக்கு அழைத்துச் சென்றார் ஜேசுதாஸ்.

மகனின் வீட்டில் இருப்பதைப் போல, சவுகரியமாக, மகிழ்ச்சியாக இருந்து வருகிறார் பல்லவி நரசிம்மாச்சாரியார்!

பேட்டி: **சாருகேசி**

அட்டை வண்ணப்படம், மற்றும் படங்கள்: **யோகா**



## மாதம் ஒரு தொகுதி

# விளவங்கோடு தொகுதிக்கு வரப்போகிறோம்!

கல்கியின் 'மாதம் ஒரு தொகுதி' திட்டத்தின் கீழ் நடந்த இரண்டாவது குலுக்கலில் தேர்ந்தெடுக்கப்பட்ட தொகுதி, கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள விளவங்கோடு தொகுதி.

இ. காங்கிரஸ் எம். எல். ஏ.வான எம். சுந்தரதாஸ் மார்க்ஸிஸ்ட் கட்சி வேட்பாளரை விட 1214 வாக்குகள் அதிகம் பெற்று வெற்றி பெற்றிருப்பவர்.

விளவங்கோடு தொகுதியிலுள்ள அனைவரும் தங்கள் தொகுதி எம். எல். ஏ.விடம் தாங்கள் கேட்க விரும்பும் கேள்விகளை எங்களுக்கு எழுதியனுப்பலாம். வாக்குறுதிகளை நினைவூட்டலாம். அத்துடன் அவர் செய்யும் சிறப்புப் பணிகள் ஏதேனும் இருந்தால் குறிப்பிட்டு எழுதலாம். தொகுதியின் வளர்ச்சிக்கான உங்கள் ஆலோசனைகளையும் வழங்கலாம்.

நீங்கள் எழுதும் எல்லா விஷயங்களையும் அவர் கவனத்துக்குக் கொண்டு வருவதோடு, அவருடன் பேசுவோம்; கேள்விகள் கேட்போம். பிறகு தொகுதியை நேரடியாக வந்து ஆராய்வோம்.

இறுதியில் எங்கள் அனுபவங்களைக் கல்கியில் வெளியிடுவோம். (தற்போது வீரபாண்டித் தொகுதியில் நமது சுற்றுப் பயணம் நடந்து கொண்டிருக்கிறது).

**விளவங்கோடு தொகுதியிலுள்ள கல்கி வாசகர்களின் கடிதங்கள் கல்கி அலுவலகத்துக்கு வந்து சேர வேண்டிய கடைசி தேதி: ஏப்ரல் 11.**

உறையின் மேல் 'மாதம் ஒரு தொகுதி' என்பதை மறக்காமல் குறிப்பிட்டு உடனே எழுதுங்கள். கல்கியின் இந்தச் சமுதாயப் பணி வெற்றி பெற ஒத்துழைப்புத் தாருங்கள்.

— **ஆசிரியர்.**


அண்ணாதுரை
ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காண்போம்!


கருணாநிதி
ஏழையின் சிரிப்பில் போதையைக் காண்போம்!
மலிவு விலை சாராயம்


ரயில் கட்டண உயர்வு காரணமாக விலைவாசி உயர்வு
ரயில் பயணச் சரக்கு கட்டண உயர்வு


கவலைப் படாதே! பளுவைத் தாங்க சும்மாடு தாரேன்!
ஜார்ஜ் பெர்னாண்டஸ்
பயணிகளுக்கு சில கூடுதல் வசதிகள்


அமைதிப்படை
உனக்கு என்னாலான உதவி செஞ்சிட்டேன். டாடா... பை பை...


போயிட்டு வாரேன்... உனக்கு என்ன கொறைச்சல்? அதான் சுதந்திர ஈழம் அறிவிச்சிட்டேனே?
வரதராஜ பெருமாள்


அவங்க போனா என்ன? நான் இருக்கேனே... ஒரு வழி பண்ணிட மாட்டேனா?
விடுதலைப் புலிகள்


யார் வந்தா என்ன, போனா என்ன? என் பாடு திண்டாட்டம் தான்!
ஈழத் தமிழர்



# கல்கி

1990 மார்ச் 25
மலர் 48 இதழ் 34
சுக்ல பங்குனி 12



## ஏழையின் சிரிப்பில் போதையைக் காணலாம்!

'எப்போடாப்பா கள்ளச் சாராயம் குடித்துப் பத்து பேராவது சாவார்கள், நாமும் மதுவிலக்கைத் தளர்த்தி, சாராயத்தை ஆறாக ஓட விடுவோம்' என்று காத்திருந்தவர் போல, 'மலிவு விலைச் சாராயம்' என்ற மலிவான கொள்கையை அறிவித்து விட்டார் முதல்வர்.

பணக்காரர்கள் விஸ்கியும், பிராந்தியும் அருந்துகிறார்களாம்; ஆனால் பாவம், ஏழைகள் கள்ளச் சாராயம் குடித்துச் சாகிறார்களாம்; இந்த அநீதியைத் தடுக்கத்தான் மலிவு விலைச் சாராயமாம்! — அரசு அறிக்கை விளக்கம் தருகிறது. பூரண மதுவிலக்கைக் கடுமையாக அமுல்படுத்துவதை விட்டு விட்டு, ஏழைக்குப் பரிவு காட்டுவது போல் நடிக்கிறது அரசு. கள்ளச் சாராயம் அருந்தி ஒரு சிலர் எப்போதோ ஒரு முறை சாவதற்குப் பதில் மலிவுச் சாராயம் அருந்தி எல்லோருமே படிப் படியாகச் சாக வழி வகுக்கிறது.

லஞ்ச ஊழல் குறையவும், மக்கள் நல்வாழ்வுத் திட்டங்களுக்குப் பணம் திரட்டவும் மலிவு விலைச் சாராயத்தைப் பெருக்கெடுத்து ஓட விடப் போகிறதாம் அரசு! ஏலம் — டெண்டர் என்ற இரட்டை வழியில் மலிவுச் சாராயம் விநியோகமாகப் போகிறதே. அதில் லஞ்ச ஊழல் இருக்காதா? மக்களைக் குடிகாரர்களாக்கி அவர்கள் ஆரோக்கியத்தைக் கெடுத்த பிறகு அவர்களுக்கு நல்வாழ்வுத் திட்டங்கள் ஒரு கேடா? காதுலே பூ! ஆட்சிக்குப் பணத்தேவை இருக்கலாம்; ஆனால் கட்சிக்காரர்களுக்குத் தாகம் முற்றி விட்டது! அதைத் தணிக்கத்தான் இந்தக் கரிசன நாடகமும் மலிவான நடவடிக்கையும்.

கடற்கரைக் கூட்டத்திலேயே பகிரங்கமாக, ''தேர்தல் முடியட்டும் நீங்கள் எதற்குக் காத்திருக்கிறீர்களோ அது நடக்கும்'' என்று தி. மு. கழகத் தோழர்களுக்கு ஜாடையாகச் சொன்ன நடிகரை, முதல்வர் அன்று கடிந்து கொண்ட வேகமென்ன, இன்று அந்த நடிகர் கூறியதே மெய்யாகி வரும் வேதனை என்ன!

இந்தப் புதிய கொள்கை வெளியாகியுள்ள அதே நாளிதழின் வேறு பக்கத்தைப் புரட்டிப் பார்த்தால், வைபீன் சாராய கேஸில் கேரள உயர் நீதி மன்றத்தின் தீர்ப்பைக் காணலாம். அந்த வழக்கும் தீர்ப்பும் மதுவிலக்கைத் தளர்த்துவதால் கள்ளச் சாராய உற்பத்தியும் விநியோகமும் குறைந்து விடாது; கள்ளச் சாராயத்தைக் குடித்துச் சாவதும் நின்று விடாது என்பதை உணர்த்தும். தேவைப் படுவது மதுவிலக்கைத் தீவிரமாக அமுல் படுத்தும் மன உறுதியே.

அரசியல் ரீதியாகப் பார்த்தாலும் முதல்வரின் புதிய, மலிவான கொள்கை ஆபத்தானது. ராஜாஜி வீடு தேடி வந்து வேண்டுகோள் விடுத்தும் கேளாமல், அன்றைய முதல்வர் கருணாநிதி மதுவிலக்கை ரத்து செய்தார். மதுவை அடியோடு மறந்து விட்டிருந்த ஒரு தலை முறையினரை அதற்கு அடிமைப்படுத்தினார். ஆட்சி இழந்தார். எம். ஜி. ஆர்., தம் ஆட்சியின் இடையில் ஒரு முறை, மதுவிலக்கைத் தளர்த்தினார். நல்ல வேளையாகச் சீக்கிரமே விழித்துக் கொண்டு மீண்டும் அமுல்படுத்தினார். வாக்காளர்கள் — குறிப்பாகப் பெண்மணிகள் — மதுவிலக்கினைத் தளர்த்துவதை வரவேற்கவே மாட்டார்கள்.

''மதுவின் மூலம் கிடைக்கும் வருமானம், தொழு நோயாளியின் கையிலிருக்கும் வெண்ணெய்க்குச் சமம்'' என்றார் அண்ணாதுரை. ஆனால், ஏழையின் சிரிப்பில் போதையைக் காணத் தீர்மானித்து விட்ட இன்றைய தி. மு. க தலைமைக்கு அண்ணாவின் அறிவுரைகள் கூட மறந்துதான் போகும்!

''டேக் ஆஃப் நன்றாயிருக்கிறது; லாண்டிங் எப்படியோ?'' என்று பைலட் பிரதமர் பொறுப்பேற்ற போது கூறிய கருணாநிதி, அந்தத் தீர்க்க தரிசனத்தைத் தம் விஷயத்திலும் இவ்வளவு சீக்கிரம் மெய்யாக்குவார் என்று யார்தான் எதிர்பார்த்தார்கள்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# பட்ஜெட்டின்



# சூத்திரம் என்ன?

| வரவு | செலவு |
|---|---|
| தனிமனிதனோ | தனிமனிதனோ |
| அல்லது | அல்லது |
| அவனுடைய | அவர் |
| பிரதிநிதியோ | பிரதிநிதியோ |
| செய்யும் | செய்யும் |
| செயலினால் | செயலினால் |
| நல்லோர்கள் | நல்லோர்கள் |
| சந்தோஷம் | மனம் |
| அடைந்தால் | வருந்தினால் |
| அது வருமானம் | அது செலவு |

ஆயைால் கிராண்ட் ஸ்வீட் வாங்கி நல்லோர்களுக்கு
விநியோகம் செய்து அவர்களின் ஆசி பெற்று
உங்கள் வருமானத்தை பெருக்கிக் கொள்ளவும்.

திருமண வைபவங்களுக்கு:- சீர் முறுக்கு, சீர் முள்ளு தேன்குழல்
சீர் அதிரசம், திரட்டுப்பால், அப்பம், பருப்புத் தேங்காய் வகைகள்
முதலியவை செய்துத் தரப்படும்.



**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்**

24, 2வது மெயின் ரோடு
காந்தி நகர், அடையாறு,
சென்னை-600 020
போன்: 412557




மாலினி செங்கல்பட்டை அடைந்த போது. ரயில் வந்து சேர்ந்து. பத்து நிமிடம் ஒய்வெடுத்துப் புறப்பட்டுச் சென்று விட்டிருந்தது.

ரயில்வே ப்ளாட்பாரத்திலும் ஸ்டேஷன் சுற்றுப்புறங்களிலும் தேடினாள். ரஞ்சனா எங்கும் காணப்படவில்லை.

'இப்படியொரு தவறு நடந்திருக்கவே கூடாது' என்று நினைத்தாள். 'இன்ஸ்பெக்டரின் குறுக்கீட்டால் ஏற்பட்ட காலதாமதம் அவள் திட்டத்தையே சீர்குலைத்து விட்டது. ஒருவேளை.... அது வேண்டுமென்றே செய்யப்பட்ட காலதாமதமோ?'

யோசித்தவாறே காரை நெருங்கினாள். டிரைவர் கேட்டான்.


























தனியே காத்திருந்த ரஞ்சனாவிடம் சிலர் தகாத முறையில் நடக்க முயற்சி செய்த போது குறுக்கிட்டுப் பாதுகாப்பாக அழைத்துச் சென்றதாக அவன் தெரிவித்த போது பதற்றப்பட்டாள். அவசரமாக அவனுடன் புறப்பட்டாள்.

பாதித் தொலைவு சென்ற போதுதான் டிரைவரின் நினைவு வந்தது. அவனிடம் சொன்ன போது, அவளைக் கொண்டு போய் விட்டு விட்டுத் தான் திரும்பி வருவதாகக் கூறினான்.

அந்த வீட்டை அடைந்தார்கள். அவன் தொட்டதும் கதவு திறந்து கொண்டது.

''உள்ளே போங்க'' என்றான்.

சென்றதும் விருட்டென்று இழுத்து மூடி வெளியே தாழிட்டான். பாக்கெட்டிலிருந்து பூட்டெடுத்துப் பூட்டினான். சிரித்தான்.

''உள்ளேயே கிட.''

தொடரும்

# சினிமாவுக்கு ஒரு கதை!

**வீ**ட்டு வாசலில் ஏதோ கார் வந்து நிற்கும் ஒலி கேட்டது. கோமதி கைக்காரியத்தை அப்படியே போட்டுவிட்டு, ''யார் வந்திருக்கிறார்கள்?'' என எட்டிப் பார்க்க ஜன்னலடிக்கு விரைந்தாள்.

''நம்மைத் தேடிக் கொண்டு வர யார் இருக்கிறார்கள்?'' என்று கேட்டான் நாராயணன் — அன்றைய தினசரியில் காலையில் படிக்க விட்டுப் போன பகுதிகளின் மேல் தன் விழிகளை ஓட்டியபடி.

அவன் பேச்சைப் பொருட்படுத்தாமல், ஜன்னல் திரையை விலக்கிக் கோமதி வெளியே எட்டிப் பார்த்தாள்.

''என்னங்க... கார் நம்ம வீட்டிற்குத்தான் வந்திருக்குது... யாரோ இரண்டு பேர் இறங்கி உங்களைப் பார்க்கத்தான் வர்றாங்க...'' என்றாள் பரபரப்புடன்.

''எவனாவது விலாசம் மாறி வந்திருப்பான்...'' என மெதுவாக முணுமுணுத்த நாராயணன் கையை ஊன்றிக் கொண்டு எழுந்தான். கொடியில் கிடந்த 'டர்க்கி' துண்டால் தன்னைப் போர்த்திக் கொண்டான்.

அதற்குள் கோமதி ஓடிப் போய் வாசல் கதவைத் திறந்து விட்டிருந்தாள்.

ஐம்பது வயது மதிக்கத்தக்க ஒருவர். முகத்தில் அதிகாரக்களை. இடுப்பில் பாலியஸ்டர் வேஷ்டி. தழையத் தழையச் சந்தனக் கலர் ஜிப்பா. கழுத்தில் பருமனான மைனர் செயின். கையில் மோதிரங்கள். செல்வச் செழிப்பைப் பறைசாற்றியபடி உள்ளே நுழைந்தார். கூடவே எளிமையாக ஒருவர், கைப்பையை ஏந்தியபடி. முன்னவர் பின்னால் ரொம்பப் பணிவுடன் நடந்து வந்தார்.

''நீங்கள்தானே மிஸ்டர் நாராயணன்?''

''ஆமாம்!''

''போன மாதம் 'கல்யாணி' மாத இதழில் உங்கள் குறுநாவல் 'மகிழம்பூக்கள்' என்பதற்குப் பரிசு கிடைத்திருக்கிறதல்லவா?''

''ஆமாம். ஆமாம்.''

''என் பெயர் சுந்தரவினாயகம். 'எஸ்.வி. பிக்சர்ஸ்'னு கேள்விப்பட்டிருப்பீங்களே... அதற்கு நான்தான் முதலாளி. எங்க டைரக்டர் கமலநாதன் உங்கள் கதையைப் பற்றிச் சொன்னார். நானும் படித்தேன். படம் எடுக்க நல்ல சப்ஜெக்ட். எனக்கு எதையும் ஆறப் போடற பழக்கம் கிடையாது. உங்ககிட்டே உடனே பேசி முடிவு செய்யலாம்னு.''

நாராயணனின் முகம் மலர்ந்தது. ''அப்படியா? ரொம்பச் சந்தோஷம்!'' எனக் கூறியவன் ஓரமாக மடித்துப் போட்டிருந்த இரண்டு இரும்பு நாற்காலிகளைப் பிரித்துப் போட்டான். தானும் ஒரு முக்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டான்.

''நம்ம படமெல்லாம் கமலநாதன்தான் டைரக்ட் செய்யறார். அவரைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீங்களே...? சமீபத்தில் கூட எங்கள் படம் 'ஆலமர நிழல்' ஜனாதிபதி பரிசு வாங்கி...''

''உம்... தெரியும். படம் கூடப் பார்த்தேன். பிரமாதம்'' என்றான் நாராயணன், மனம் திறந்து.

''உங்கள் வீட்டு விலாசம் எங்களுக்குத் தெரியலே. கலைவாணி ஆபீஸுக்கு டெலிபோன் செய்து விசாரித்துவிட்டு வந்திருக்கிறோம்.''

உள்ளே மறைந்தும் மறையாமலும் நின்றபடி கோமதி இந்த உரையாடலைக் கவனித்துக் கொண்டிருந்தாள். நாராயணன் மின்வாரியத்தில் பணிபுரியும் ஒரு குமாஸ்தா. சர்விஸ்தான் பதினைந்து வருஷம். வருட சம்பளம் 'தொட்டுக் கொள், துடைத்துக் கொள்' என்ற வகையில்தான் இருந்தது. எல்லாப் பத்திரிகைகளுக்கும் சிறுகதைகள் எழுதி அனுப்புவான். ஐந்திற்கு இரண்டு பழுதில்லாமல் அச்சேறும்.

கடைசியாக 'கலைவாணி' இதழ் நடத்திய குறுநாவல் போட்டியில் அவனுடைய படைப்பு மூன்றாவது பரிசாக ரூபாய் ஐந்நூறைப் பெற்றிருந்தது.

கோமதியின் மனம் பரபரவென்று கணக்குப் போட்டது. சினிமாக்காரர்கள் அள்ளி அள்ளிக் கொடுப்பார்களாமே...! பத்தாயிரம்? இருபதாயிரம்...? ஐம்பதாயிரம்... ஏன், ஒரு லட்சம் கூடத் தருவார்கள்!

''கோமதி... காப்பி...'' என்றான் நாராயணன்.

''அதெல்லாம் வேண்டாம்... எனக்கு அவசரமாகப் போக வேண்டும். ஸ்டுடியோ

எபோகன்

வில் காத்திருப்பார்கள்...'' என்ற சுந்தர விநாயகம் தம்முடன் வந்தவரிடம் ஏதோ மெதுவாகச் சொன்னார்.

அவர் தம் கைப்பையைத் திறந்து டைப் செய்யப்பட்டிருந்த பத்திரத்தை வெளியே எடுத்தார்.

''இந்த ஒப்பந்தம் நாங்கள் வழக்கமாகக் கதாசிரியர்களுடன் செய்து கொள்வோம். எங்கள் வக்கீல் தயார் செய்து கொடுத்தது. படித்துப் பாருங்கள்.'' எனச் சுந்தர விநாயகம் நீட்டினார்.

பத்திரம் சுருக்கமாய் இருந்தது. அவன் கதையை உபயோகப்படுத்தி எல்லா மொழிகளிலும் படம் எடுக்க உரிமை கேட்டிருந்தார்கள். நாராயணன் அந்தப் பத்திரத்தை நிதானமாகப் படித்தான்.

''இப்போ முன் பணம் ஆயிரம் ரூபாய் தருகிறோம். படப்பிடிப்பு ஆரம்பமாகும் நாள் இன்னொரு நாலாயிரம்... படம் வெளி வரும்போது பாக்கி ஐயாயிரம். மொத்தம் பத்தாயிரம்'' என்றார் சுந்தரவிநாயகம்.

''இவ்வளவுதானா?'' எனக் கேட்ட நாராயணன் சிரத்தையில்லாமல் திருப்பிக் கொடுத்தான்.

''உங்ககிட்டே வெறும் கதையைத்தான் வாங்கறோம். அதற்கு ட்ரீட்மெண்ட் எழுதணும். அப்புறம் வசன கர்த்தாவிற்குப் பணம் தரணும்... படம் முடியும் வரை அவரைப் பக்கத்தில் இருத்திக் கொள்ள வேண்டும். உங்களுக்குத் தெரியாததா?'' எனக் குழைந்தார் அவர்.

''இல்லீங்க... எனக்குச் சம்மதம் இல்லை,'' என்றான் நாராயணன்.

உள்ளே கோமதி இந்தப் பதிலைக் கேட்டு அதிர்ந்து போனாள்.

''யோசியுங்க... அவசரப்படாதீங்க...''

''இதில் யோசிக்க என்னங்க இருக்கிறது? எனக்கும் உலக நடப்புத் தெரியும்!''

கோமதி கலவரப்பட்டுப் போனாள். நிச்சயம் இந்த மனிதர் எக்குத்தப்பாகப் பேசி வந்தவர்களை விரட்டி விடப் போகிறார். நல்ல வாய்ப்பு நழுவிவிடப் போகிறது.

''இப்படிச் சொன்னால் எப்படி? உங்கள் அபிப்பிராயம்...''

''என்ன இருக்கிறது சொல்ல? ஒரு கதைக்கு இரண்டு லட்சம், மூன்று லட்சம் கொடுத்து வாங்கியதாகக் கூடக் கேள்விப் பட்டிருக்கிறேன்.''

''அதெல்லாம் ஒரு மொழியில் ஹிட் ஆன படத்திற்கு. எழுதியவர் ஏற்கெனவே பிரபலமாக இருப்பார். இது உங்களுக்கு ஆரம்பம் தானே! நம்ம கம்பெனி ராசியைப் பாருங்களேன். அடுத்தடுத்து உங்களுக்கு வாய்ப்புக்கள் தேடி வரும்.''

''எனக்குப் பேராசை கிடையாது. ஏதாவது ஆதாயம் கிடைத்தால் அது கணிசமாக — உருப்படியாக இருக்க வேண்டும். ஐம்பதினாயிரம் கொடுங்கள். அதுவும் தமிழ்ப்பட உரிமைக்காக மட்டும். பணம் மொத்தமாக ஒரே தவணையில் தரவேண்டும்.''

அவர் சிரித்தார்.

''யாரோ தப்பாக் கதைகட்டி விட்டிருக்காங்க. நீங்க வெளியிலே விசாரிச்சுப் பாருங்க. எத்தனை பேர் கதையை வைத்துக்



கொண்டு கம்பெனி கம்பெனியா ஏறி இறங்கறாங்க? எத்தனை பேர் டைரக்டர், புரொட்யூஸர் வீட்டு வாசலில் தவம் கிடக்கிறாங்க, தெரியுமா?''

''உண்மைதான். ஆனால் நான் அப்படி நிற்கவில்லையே.! ஆண்டவன் புண்ணியத்தில் சாப்பாடு போட ஒரு உத்தியோகம் இருக்கிறது. நீங்கள்தான் என் வீடு தேடி வந்திருக்கிறீர்கள். நான் கேட்டது நியாயம். சம்மதமானால் இப்போதே ஒப்பந்தம் செய்து கொள்ளலாம்.''

அவர் முகம் சுருங்கியது. கோபத்தின் ரேகைகள் முகத்தில் படர்ந்தன. ''இதோ பாருங்கள், நாராயணன்... நான் கொஞ்சம் நல்லது. கெட்டதிற்குப் பயப்படுகிறவன். உங்கள் கதையை உங்கள் அனுமதியில்லாமல் என்னால் படம் எடுக்க முடியாதா, என்ன? என்ன பெரிய விஷயம்? கதாநாயகன், கதாநாயகி பெயரை மாற்ற வேண்டும். கும்பகோணத்தில் நடப்பதைக் கோயமுத்தூருக்கு மாற்ற வேண்டும். புதிதாகச் சில பாத்திரங்கள். இருப்பவர்களில் சிலருக்குக் கல்தா... இங்கேயும் அங்கேயும் சின்னதாக ஒரு திருப்பம்... நீங்கள் ஒன்றும் செய்ய முடியாது!'' எனச் சவால் விட்டார்.

நாராயணன் பொறுமை இழந்தான். இருக்கையை விட்டு எழுந்தான்.

''அப்படிச் செய்வதானால் செய்யுங்கள்... நான் கோர்ட்டில் கேஸ் போட முடியும். ஆனால் அதற்கெல்லாம் என்னிடம் சக்தி கிடையாது.''

''கோர்ட்டிற்குப் போய்த்தான் என்ன செய்ய முடியும்? நான் பார்க்காத வழக்கா? சந்திக்காத கோர்ட்டா? உங்கள் பக்கம் கேஸ் ஜெயிச்சாக் கூட செலவு போகப் பத்தாயிரமாவது மிஞ்சுமா என்பது சந்தேகம்.''

''எதற்கு வீண் பேச்சு...? நான் சொன்ன தொகைக்கு விருப்பம் இருந்தால்...''

வந்தவர் எழுந்து விட்டார். ''வீட்டு வாசலைத் தட்டிய ஸ்ரீதேவியை அலட்சியம் செய்கிறீர்கள்... இதற்காக நிச்சயம் வருத்தப் படப் போகிறீர்கள்...'' என்று எச்சரித்து விட்டுப் போனார் சுந்தரவினாயகம்.

அவர்கள் போனதும் நாராயணனைக் கோமதி மொலு மொலுவென்று பிடித்துக் கொண்டு விட்டாள்.

''என்னங்க இப்படிச் செய்து விட்டீர்கள்? பத்தாயிரம் என்றால் சும்மாவா? கிட்டத்தட்ட நாலு பவுன் வாங்கலாம்!'' என அங்கலாய்த்தாள்.

''பத்தாயிரம் ரூபாய் பெரிதுதான், கோமதி. அதை மொத்தமாகக் கொடுத்தால் நீ சொன்னபடி பயன்படும்தான். இப்போது ஆயிரம் ரூபாய் வாங்கியவுடன் அவர் எப்போது படம் ஆரம்பிப்பார் எனக் காத்திருக்க வேண்டும்! அப்புறம் அது எப்போது முடியும் என எதிர்பார்த்திருக்க வேண்டும். நாலு பெரிய மனிதர்கள் வந்தால் உட்கார

# வாலஸ் 100 ஆண்டு பாரம்பரிய சிறப்புடன் அறிமுகப்படுத்தும் சேமியா.

ஆங்கிலேயர் ஆட்சி செய்த காலத்தில், ராய் சாஹுப் என்பவர் ஒரு சிறிய மாவுமில் ஒன்றை பம்பாயில் வாங்கினார்.

மாவுமில் ஒன்றை நடத்த வேண்டும் என்கிற அவரது கனவு நனவாகியது.

ஒவ்வொரு நாளும் பொழுது விடிகையிலேயே, வயலிலிருந்து கோதுமைகள் நேரடியாக மாட்டு வண்டிகளில் வந்திறங்கும். கோதுமையின் தரம் சிறப்பாக இல்லாவிடில் அவை திருப்பியனுப்பப்படும். கற்கள், மண், தூசு மற்றும் கட்டைகளை நீக்குவதற்காக கோதுமை இருமுறை சுத்தம் செய்யப்படும்.

சுத்திகரிக்கப்பட்ட கோதுமையிலிருந்து சுத்தமான மாவு தயாரிக்கப்படும். இவ்வாறு ராய் சாஹுப் தனது கனவை நனவாக்குவதில் மும்முரமாக ஈடுபட்டார்.

தொடர்ந்து வரலாறு படைத்தார்.

இன்று, வாலஸ் ஆசியாவின் மாபெரும் மாவு மில்லாக வளர்ந்துள்ளது. நாட்டின் மிகச்சிறந்த பிஸ்கட்டுகளாகிய பார்லே-ஜி, மோனேகோ, கிராக்ஜாக் யாவும் வாலஸ் மாவு கொண்டே தயாரிக்கப்படுகின்றன.

வாலஸ் இத்தகைய தொழில்நுட்ப நிபுணத்துவம் மற்றும் அறிவை வாலஸ் பாஸ்டா தயாரிப்புகளுக்கென பயன்படுத்தியுள்ளது: சேமியா, நூடுல்ஸ், மேக்ரோனி, ஸ்பெகட்டி.

**வாலஸ் சேமியா.**

**பாரம்பரிய சிறப்பு வாய்ந்தது.**

வாலஸ் சேமியா மிகச் சிறந்த தரமுள்ள கோதுமை மாவிலிருந்து தயாரானது.

வாலஸ் சேமியா கொண்டு சுவைமிக்க உணவுகள் பலவும் நீங்கள் தயாரிக்கலாம்: சிற்றுண்டிகள், உணவுகள், இனிப்பு வகைகள். இதோ அவற்றில் சில.

**வாலஸ் சேமியா பாயசம்**

தேவையான பொருள்கள்: 100 கிராம் வாலஸ் சேமியா: 1 லிட்டர் பால், 4 மேசைக் கரண்டி சர்க்கரை, வாசனைக்கு ஏலக்காய் மற்றும் ஜாதிக்காய், உலர்ந்த திராட்சை துண்டாக்கிய முந்திரிப் பருப்பு, ரோஜா இதழ்கள்/பச்சைக் கற்பூரம் சுவைக்கு (தேவையானால்).

செய்முறை: சேமியாவை வேகவைத்து நீரை வடிய வைக்கவும். பாலில் சர்க்கரை சேர்த்து நன்கு கெட்டியாகும் வரை காய்ச்சவும். வேகவைத்த சேமியா, ஏலக்காய், ஜாதிக்காய் இவற்றை சேர்க்கவும். ஒரு சிட்டிகை பச்சைக் கற்பூரத்தை வாசனைக்கு சேர்க்கவும். திராட்சை, முந்திரி, ரோஜா இதழ்கள் இவற்றை மேலாகத் தூவி அறையின் சீதோஷ்ண நிலையில் பரிமாறவும்.

**வாலஸ் சேமியா இட்லி**

தேவையான பொருள்கள்: 1 பேக்கட் வாலஸ் சேமியா (200 கிராம்), 40 கிராம் ரவை, 1-1 $^{1}/_{2}$ கோப்பை கடைந்த தயிர், தாளிப்பதற்கு 1 தேக்கரண்டி உளுத்தம் பருப்பு, 1 தேக்கரண்டி கடுகு, 1 தேக்கரண்டி துண்டாக்கிய இஞ்சி, நறுக்கிய பச்சை மிளகாய், 2 சன்னமாக நறுக்கிய கறிவேப்பிலை 1 கொத்து, 10 முந்திரிப் பருப்பு, மற்றும் 2 மேசைக் கரண்டி நெய்.

செய்முறை: சேமியாவை 5 நிமிடம்போல் வறுத்து தனியே வைக்கவும்.

நெய்யை சூடாக்கி, கடுகு, உளுத்தம் பருப்பு கறிவேப்பிலை இவற்றை வெடிக்க விடவும். முந்திரி, பச்சை மிளகாய், இஞ்சி இவற்றை சேர்த்து சிறிது வறுக்கவும். அதன்பின் ரவையை சேர்த்து வறுக்கவும்.

அடுப்பிலிருந்து இறக்கியபின் சேமியாவை சேர்க்கவும். தயிரை அதில் ஊற்றி, உப்பை சேர்த்து 5 நிமிடங்கள் அப்படியே வைக்கவும்.

அதன்பின் இட்லி தட்டுகளில் மாவை ஊற்றி 5 நிமிடங்கள் வேகவிடவும். ஆவிபறக்கும் இட்லியை தேங்காய் சட்னியுடன் பரிமாறவும்.

**வாலஸ் சேமியா உப்புமா**

தேவையான பொருட்கள்: 1 பேக்கட் வாலஸ் சேமியா (200 கிராம்), 3 மேசைக் கரண்டி எண்ணெய், 1/4 கோப்பை கடலைப் பருப்பு, 1/4 கோப்பை உளுத்தம் பருப்பு, 2 வெங்காயம் நறுக்கியது, 1 தேக்கரண்டி கடுகு, நறுக்கிய பச்சை மிளகாய் 4, 2 தேக்கரண்டி சர்க்கரை, 1 கொத்து கறிவேப்பிலை, 2 கோப்பை நீர், தேவைக்கேற்ப உப்பு, மிளகு மற்றும் மிளகாய்ப் பொடி, அலங்கரிக்க கொத்துமல்லி.

செய்முறை: சேமியாவை எண்ணெயில் சிறிது சிவக்கும் வரை வறுத்து தனியே வைக்கவும்.

கடுகு மற்றும் பருப்புகளை எண்ணெயில் தாளித்து நன்கு கிளறவும். வெங்காயம் மற்றும் இதர பொருட்களையும் சேர்த்து வதக்கவும்.

2 கோப்பை நீரை விட்டு வறுத்த சேமியாவைப் போடவும். நன்கு வேகும்வரை மூடி வைக்கவும். அலங்கரித்து பரிமாறவும். ஆவிபறக்கும் உப்புமா தயார்.

**வாலஸ் எலுமிச்சம்பழ சேமியா**

தேவையான பொருட்கள்: 1 பேக்கட் வாலஸ் சேமியா (200 கிராம்), 1 சிறிய தக்காளி நறுக்கியது, 2 எலுமிச்சம்பழத்தை பிழிந்து கொள்ளவும். கொத்துமல்லி தழை சிறிது. தாளிப்பதற்கு: 1 தேக்கரண்டி உளுத்தம் பருப்பு, 1 சிறிய இஞ்சித் துண்டு நறுக்கியது, பச்சை மிளகாய் 2 நறுக்கியது. சிறிது கறிவேப்பிலை.

செய்முறை: சேமியாவை நெய்யிலே 2 நிமிடங்களுக்கு வறுக்கவும்.

கடுகு, உளுத்தம் பருப்பு, கறிவேப்பிலை, பச்சை மிளகாய், இஞ்சி இவற்றை எண்ணெயில் தாளிக்கவும். 2 கோப்பை நீரை சேர்த்து கொதிக்க விடவும். உப்பு போடவும்.

வறுத்த சேமியாவைப் போட்டு சில நிமிடங்களுக்கு மூடி வைக்கவும். அதன்பின் எலுமிச்சை சாறையும் தக்காளியையும் சேர்க்கவும். கொத்துமல்லியால் அலங்கரிக்கவும்.

**வாலஸ் தயிர் சேமியா**

தேவையான பொருட்கள்: 1 பேக்கட் வாலஸ் சேமியா (200 கிராம்), 1 தேக்கரண்டி கடுகு, 1 மேசைக் கரண்டி உளுத்தம் பருப்பு, 2 நறுக்கிய பச்சை மிளகாய், சிறிய இஞ்சித் துண்டு நறுக்கியது, கறிவேப்பிலை, 1 மிளகாய் வற்றல், பெருங்காயம், வெள்ளரித் துண்டுகள், நறுக்கிய குடமிளகாய், கொத்துமல்லி இவற்றுடன் கடைந்த தயிர்.

செய்முறை: கொதிக்கும் நீரில் சேமியாவை உப்பு சேர்த்து 5 நிமிடங்கள் வேக விடவும்.

சேமியா வேகும்போதே மற்றொரு இரும்புச் சட்டியில் எண்ணெய் விட்டு கடுகு, உளுத்தம் பருப்பு, கறிவேப்பிலை, பச்சை மிளகாய், மிளகாய் வற்றல், பெருங்காயம் இவற்றை முறையே தாளிக்கவும்.

வெந்த சேமியாவை இரும்புச் சட்டியில் கொட்டியபின் அடுப்பை அணைத்து விடவும்.

ஆறியபின் தயிரை சேர்க்கவும்.

VERMICELLI

மேலும் சமையல் குறிப்புகள் அடங்கிய இலவச கைப்புத்தகம் பெற இம் முகவரிக்கு எழுதவும்:

தி வாலஸ் கிச்சன்
தி வாலஸ் ஃப்ளவர் மில்ஸ் கம். லிட்.
சாம்பனி மார்க் விஷ்ராம் ஜோன்ஸ் பிரிட்ஜ்
பம்பாய் 400 009.

WALLACE

சோபா வாங்குவோம். பிறகு அவர்களுக்குக் குளிர்பானம் வழங்க ஒரு ஃப்ரிட்ஜ் தேவைப்படும். இதெல்லாம் வைக்க இடம் போதாது என்று வேறு வீடு பார்ப்போம். கடைசியில் அந்தப் பத்தாயிரத்தை நாம் முழுதாகப் பார்க்கும் போது, நமக்குக் கடன் சுமை இரண்டு பங்காகியிருக்கும்... புரிகிறதா?''

கோமதிக்குப் புரியவில்லை. அவன் சொல்வதில் எந்த நியாயமும் இருப்பதாகத் தெரியவும் இல்லை. ''தனக்கும் தெரியாது. மற்றவர் சொன்னாலும் கேட்பதில்லை'' என மனத்திற்குள் அவனை நொந்து கொண்டாள்.

சுந்தரவினாயகம் சும்மா பயமுறுத்தவில்லை. சொன்னதைச் செய்தே காட்டினார். நாராயணனின் கதை 'பூக்களின் புன்முறுவல்' என்ற தலைப்பில் ஆறே மாதத்தில் வெளியிடப்பட்டது. இயக்கம்: கமலநாதன். 'எஸ். வி. பிக்சர்ஸ் கதை இலாகா' திரைக்கதைக்குப் பொறுப்பு ஏற்றது. கதையின் மையக் கருத்து முடிவும் மாற்றப்படவில்லை. அங்கேயும் இங்கேயும் சிறுசிறு திருப்பங்கள், மாற்றங்கள்.

நாராயணன், கோமதி இரண்டு பேரும் படம் பார்த்துவிட்டு வந்தார்கள்.

''பரவாயில்லை, நன்றாக எடுத்திருக்கிறார்கள்!'' என நாராயணன் அபிப்பிராயம் சொன்ன போது கோமதிக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது.

''ஆமாம்... உங்களுக்கு ரோஷமே கிடையாதா? உங்கள் கதையை — உங்களிடம் சவால் விட்டுவிட்டு ஒருத்தன் திருட்டுத்தனமாகப் படம் எடுத்திருக்கிறான். கோபமே வரவில்லையா?''

''கோபம் வந்தால் என்ன ஆகும் கோமதி? கோர்ட்டுக்குப் போகலாம்... எத்தனை வருஷங்கள் ஆகுமோ? எவ்வளவு செலவழியுமோ? விடுவிடு. ஆண்டவன் இருக்கிறான். பார்த்துக் கொள்வான்!''

''ஆண்டவனுக்கென்ன...? நாம் பிறந்ததிலிருந்து பார்த்துக் கொண்டுதான் இருக்கிறார்!'' என நொடித்தாள் கோமதி.

''இப்போது என்ன செய்ய வேண்டும் என்கிறாய்?'' எனக் கேட்டான் நாராயணன் அலுப்புடன்.

''இப்படியே எல்லாவற்றிற்கும் சமாதானம் சொல்லிக் கொண்டு — கோவில் தேர் மாதிரி இருந்த இடத்தை விட்டு அசையாமல் இருங்கள்!'' எனக் கத்திவிட்டுப் போனாள் கோமதி.

இரண்டு மாதங்கள் கழித்து —

பத்திரிகை படித்துக் கொண்டிருந்த நாராயணன் கோமதியைக் கூப்பிட்டான். ''இதோ பார்!'' என ஒரு செய்தியைக் காட்டினான்.

'''பூக்களின் புன்முறுவல்' அப்பட்டமான காப்பி!''

''எஸ். வி. பிக்சர்ஸ் சமீபத்தில் வெளியிட்ட 'பூக்களின் புன்முறுவல்' தங்கள் வெளியீடான தங்களது ஹிந்திப் படத்தின் அப்பட்டமான காப்பி என்று 'கிளாஸிக் பிக்சர்ஸ்' கோர்ட்டில் வழக்குத் தொடர்ந்திருக்கிறார்கள். படத்தைத் தொடர்ந்து திரையிடத் தடை செய்து இடைக்கால உத்தரவு வழங்கப்பட்டிருக்கிறது.''

''இது என்னங்க? உங்க கதையைப் போய் 'காப்பி' என்கிறான்?''

''என் கதை இல்லை, கோமதி. அதை அப்படியே எடுத்திருந்தால் இந்த வழக்கு வந்திருக்காது. இஷ்டப்படி அவர்கள் ஏதேதோ மாற்றப் போய் — அது இப்போது இட்டத்தட்ட அந்த ஹிந்திப் படக் கதையை ஒட்டிப் போய்விட்டது...'' என்றான் நாராயணன்.

''இப்போது என்ன ஆகும்?''

''பம்பாய்க்காரன் பெரிய புள்ளி. கடைசி வரையில் இழுத்தடிப்பான். படத்தை முடக்கி விட்டதால் சுந்தரவினாயகத்துக்கு ரொம்ப நஷ்டம் ஏற்படும். கூடவே ஏகப்பட்ட நஷ்ட ஈடும் பம்பாய்க்காரனுக்குக் கொடுக்க வேண்டியிருக்கும்...'' என்றான் நாராயணன்.

''மண்ணெண்ணெய் வியாபாரம் செய்யறதுனாலதான் பொண்ணுத் தர எல்லாரும் தயங்கறாங்கன்னு சொல்லி அதை விட்டுட்டீங்களே... இப்பப் பொண்ணு கெடச்சுதா....?''

''இப்ப ஸ்டவ் வியாபாரமில்லே பண்றேன்... எப்படிக் கிடைக்கும்?''

— தங்காடு போஜ¬.



கவிதைக்குள் ஒரு கவிதை

# நாணமுற்ற களிறு

கல்லைப் போலும் திண்மை வாய்ந்த வன் சோழமன்னன் கிள்ளி. அவனது யானையோ அவனைப் போலவே வீர மிக்கது.

பகைவரது மதில்களைத் தாக்கியதால் அதன் கொம்புகள் இற்றுப் போயின. பகை மன்னர் தம் மணிமுடிகளைத் தனது கால்களால் இடறியதால் கால் நகங்கள் தேய்வுற்றன.

மதில்களைத் தகர்த்தும், மணிமுடிகள் இடறியும் பெருவெற்றி பெற்ற களிறானது தன் நாடு திரும்பி வந்தது. எனினும் உள்ளே சென்று தன் துணையாகிய பிடியைக் காண நாணமுற்றுப் புறத்தே நின்றது!

என்ன காரணம்?

கொம்புகள் இற்றும், நகங்கள் தேய்ந்தும் போனதால் அழகிழந்ததாம். இந் நிலையில் பிடியைக் காண நாண முற்றதாம். தயங்கி நின்றதாம்!

ரயிலை விட்டு இறங்குமுன் புது மாப் பிள்ளை என்ன செய்வான்? பிளாட்பாரத் தில் ஒருவேளை தன் இளம் மனைவி காத்திருக்கலாம் என்பதால், ஊர் நெருங்கு முன் ரயிலிலேயே கொஞ்சம் சிரமப்பட்டா வது தன்னை அலங்கரித்துக் கொண்டுதான் கீழே இறங்குவான்.

ஆனால் ஒரு யானையால் அப்படிச் செய்யவா முடியும்? பாவம், அது ஊர் நெருங்கத் தயங்கி நின்று யோசிக்கிறது! 'அதன் காதலியாகிய பெண் யானை அதன் புற அழகை மட்டுமே பார்க்குமா, அல்லது வீர அழகையும் சேர்த்துக் காணுமா?' என்று நாமும் சிந்திக்கத் தொடங்குகிறோம்.

வீரமும், காதலும் ஒருங்கே அமையப் பெற்ற இந்த முத்தொள்ளாயிரப் பாடலில், ''பிடிமுன்பு பொல்லாமைநாணிப் புறங் கடை நின்றதே'' என்ற வரிகளில் நாண முறும் களிற்றைக் காண முடிகிறது!

கொடிமதிற் பாய்ந்திற்ற கோடும்
அரசர்
முடியிடறித் தேய்ந்த நகமும் —
பிடிமுன்பு
பொல்லாமை நாணிப் புறங்கடை
நின்றதே
கல்லார் தோட் கிள்ளிக் களிறு.

— தா. இராஜேஸ்வரி,
சென்னை — 34.



# தன்னைக்குத் தெரியாத தவறுகள்

**ப**தறிப் போனாள் பானு.

தன்னை விட ஐந்தாறு வருடங்கள் சிறியவனான ரவி, தன்னிடம் அப்படி முறை தவறி நடக்க முற்படுவான் என்பதை அவள் சற்றும் எதிர்பார்க்கவில்லை.

சமையலறையில் சாயங்காலத்துக்கு டிபன் தயாரித்துக் கொண்டிருந்தாள் பானு. அவள் அருகே நின்று ஏதோ அரட்டை அடித்துக் கொண்டிருந்த ரவி, திடீரெனக் கையை நீட்டி, அவள் இடுப்பை வளைத்து, இழுத்து அணைக்க முயற்சி செய்ததும், ஒரு வினாடி, என்ன நடக்கிறது என்பதே புரியாமல் விழித்தாள் பானு. மறு வினாடியே துள்ளிக் குதித்து அவன் கையைச் சரேலெனத் தள்ளி விட்டு, வலது கையில் சாம்பார் கரண்டியைத் தூக்கிக் கொண்டாள்.

''யூ ராஸ்கல், என்ன துணிச்சல் உனக்கு? வெளியே போடா நாயே'' என்று அவள் பெண் புலியாகச் சீறியதும், மிரண்டு போன ரவி வெளியே ஓடிப் போனான்.

உடல் முழுவதும் 'குப்'பென வியர்க்க, இதயம் படபடவென் அடித்துக் கொள்ள, கை கால்கள் துவள, திக்பிரமை பிடித்தவள் போல் அப்படியே கீழே அமர்ந்து விட்டாள் பானு. அவளுக்கு அழுகை அழுகையாக வந்தது.

இருபத்திரண்டு வயது இளைஞனான ரவி, பானுவுக்கு தூரத்துச் சொந்தம். ரவியின் குடும்பத்தாருக்கும், பானுவின் குடும்பத்தாருக்கும் பல வருடங்களாகத் தொடர்பே இல்லாமல் இருந்தது. ஒரு நாள் தன் கணவனுடன் கடைவீதிக்குச் சென்றிருந்த போது, எதிர்பாராதவிதமாக ரவியைச் சந்தித்த பானு, கணவனுக்கு ரவியை அறிமுகம் செய்து வைத்தாள்.

'மெட்ராஸ்லே இருக்க வேண்டியவன், இருச்சியிலே என்ன பண்ணிட்டு இருக்கே?' — என்ற பானுவின் கேள்விக்கு, 'அங்கேயே உட்கார்ந்திருந்தா, அப்பா எத்தனை நாளுக்குத்தான் தண்டச் சோறு போடுவார்?' என்று வேடிக்கையாகக் கேட்ட ரவி, தான் பிரபலமான தனியார் நிறுவனம் ஒன்றில் விற்பனைப் பிரதிநிதியாக வேலை பார்ப்பதாகவும், அடிக்கடி திருச்சிக்கு வருவதுண்டு என்றும் கூறினான்.

அவர்களுடைய அழைப்பின்படி, அன்றிரவு அங்கே சாப்பிட வந்த ரவி, தான் தங்கியிருந்த ஹோட்டல் சாப்பாட்டின் அவலங்களைச் சுவைபட விவரிக்கத் தொடங்கியதும் விழுந்து விழுந்து சிரித்தார்கள் பானுவும், அவள் கணவன் ராம்கியும்.

பிறகு ராம்கி மிக்க பெருந்தன்மையுடன், ''சொந்தக்காரங்க வீடு இருக்கறச்சே, எதுக்காக ஹோட்டல்லே தங்கி உடம்பைக் கெடுத்துக்கணும்? இனிமே இந்தப் பக்கம் டூர் வந்தா எங்க வீட்லேயே தங்கிக்க'' என்றான். ரவியின் முகத்தில் மகிழ்ச்சி. பானுவுக்கும் சந்தோஷமாக இருந்தது.

எப்படியும் மாதம் ஒருமுறை வந்து விடுவான் ரவி. மூன்று அல்லது நான்கு நாட்கள் தங்குவான். அவன் வந்து விட்டால் வீடே கலகலவென இருக்கும். அவனுக்குப் பிடித்த, பிஞ்சுக் கத்திரிக்காய் சாம்பார், சப்பாத்தி குருமா, உருளைக் கிழங்கு பொடிமாஸ் என்று பார்த்துப் பார்த்துச் சமைத்துப் போடுவாள் பானு. அவனுடைய பேண்ட் ஷர்ட்டையெல்லாம் கூட துவைத்து அயர்ன் பண்ணி வைப்பாள். 'ரவி ரவி' என்று மூச்சுக்கு முப்பது தரம் அழைத்து பாசத்தைப் பொழிவாள்.

சொந்தத் தம்பியாகப் பாவித்து, தான் அன்பு செலுத்திய ரவி, அப்படி நடந்து கொண்டது பெரிய அதிர்ச்சியாக இருந்தது பானுவுக்கு.

**வெ**குநேரம் அழுது கொண்டிருந்த பானு, கணவன் அலுவலகத்திலிருந்து திரும்பும் நேரம் நெருங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்து மெதுவாக எழுந்தாள்.

'நடந்தது நடந்து விட்டது. இதைக் கணவனிடம் சொல்லி அவன் மனம் நோகச் செய்ய வேண்டாம். இதை இப்படியே விட்டு விடுவோம். மறுபடியும் அந்தக் கழுதை வந்தால் வீட்டுப் பக்கமே நெருங்க விடக் கூடாது' என்று முடிவு செய்து கொண்ட பானு, முகம் அலம்பி, லேசாக அலங்காரம் செய்து கொண்டு, கணவன் வரும் போது சகஜமாக இருப்பவள் போல் தோற்றமளிக்க முயற்சி செய்தாள். ஆனால் அகத்தின் அழகு முகத்தில் தெரிந்து விட்டது.

முதல் பார்வையிலேயே மனைவியின் முகம் வாட்டமுற்றிருந்ததைக் கவனித்து விட்டான் ராம்கி.

''என்னம்மா ஆச்சு? ஏன் டல்லாயிருக்கே?'' என்று கனிவான குரலில் கேட்டபடி, மெதுவாகத் தோளைத் தொட்டதும் 'பட்'டென உடைந்து போனாள் பானு. 'ஓ'வென அழுதபடி அவனுடைய மார்பில் சாய்ந்து, கேவிக் கேவி அழுதபடி,

சத்யா ஸ்ரீனிவாசன்

நடந்ததையெல்லாம் சொல்லி முடித்தாள்.

''எப்படி நல்லவன் மாதிரி நடிச்சு நம்மை ஏமாத்தியிருக்கான் பாத்தீங்களா, அந்த ராஸ்கல்? அந்தப் பாவிக்கு விதவிதமா சமைச்சுப் போட்டு, பாண்ட், ஷர்ட் துவைச்சுப் போட்டு, எப்படியெல்லாம் சொந்தத் தம்பிக்குச் செய்யற மாதிரி செஞ்சேன்? என் புத்தியைச் செருப்பாலே அடிக்கணும்ங்க. செருப்பால அடிக்கணும்'' என்று புலம்பியபடி 'மடேர் மடேர்' எனத் தலையில் அடித்துக் கொண்ட பானுவைச் சமாதானப்படுத்திக் கட்டிலில் அமர வைத்தான் ராம்கி.

''அவன் நடந்துக்கிட்ட விதம் ரொம்ப ரொம்ப மோசம்தான் பானு. அதில் ஒண்ணும் சந்தேகமேயில்லை'' என்று சொன்ன ராம்கி, சற்று நிறுத்தி, நிதானமாக, ஆனால் அழுத்தமாக, ''ஆனா, அவன் அப்படி நடந்துக்கறதுக்கு, நீயும் ஒருவிதத்திலே காரணம். உன் மேலேயும் தப்பு இருக்கு'' என்றதும் அதிர்ந்து போனாள் பானு.

''ஐயையோ, என்னங்க நீங்க? எம் மேலேயே பழியைப் போடறீங்க. எம்மேலே எந்தத் தப்பும் கிடையாதுங்க. என்னை நம்



''உனக்கே தெரியாம நீ பண்ணின சின்னச் சின்னத் தப்புகள்தான், ரவி அப்படி நடந்துக்கக் காரணமா அமைஞ்சு போச்சு...''



எம்.எல்.ஏ. 1: ''என்னைக் கூட ஆளுங் கட்சியில் சேர்ந்தா மந்திரி பதவி தர்றேன்னு வற்புறுத்துனாங்க. நான் தான் வேண்டாம்னுட்டேன்!''

எம்.எல்.ஏ. 2: ''என்ன மந்திரியாம்...?''

எம்.எல்.ஏ. 1: ''ரயில்வே மினிஸ்டர் தர்றேன்னாங்க!''

— கடுவை. கோபால்சாமி.

---

புங்க'' என்று அரற்றத் தொடங்கினாள்.

''நீ நல்லவதான் பானு. எனக்கு உன் மேலே எந்தவிதமான குறையும் இல்லே; பயப்படாதே'' என்ற ராம்கி, ''ஆனா, உனக்கே தெரியாம நீ பண்ணின சின்னச் சின்னத் தப்புகள்தான், ரவி அப்படி நடந்துக்கக் காரணமா அமைஞ்சு போச்சு. நான் சொல்றதையெல்லாம் பொறுமையாக் கேளு'' என்று ஆரம்பித்தான்.

''நாம முதன் முறையா ரவியைச் சந்திச்சப்போ, நிச்சயமா, அவன் மனசுல எந்த விதமான கெட்ட எண்ணமும் இருந்திருக்க நியாயமில்லே. ஆனா, அவன் நம்ப விட்டுக்கு வந்து தங்கத் தொடங்கின அப்புறம், நீ அவன்கிட்டே நடந்துக்கிட்ட முறை, உன்னோட நடை உடை பாவனை, உன் பேச்சு முறை, இவையெல்லாம்தான் அவனுக்குள் சஞ்சலத்தை ஏற்படுத்தி, சபலத்தை உண்டாக்கி ஆசையைத் தூண்டியிருக்கு.

''கல்யாணமான ஒரு பொண்ணு, கனவுலே கூட செய்யக் கூடாத மிகப் பெரிய தப்பு என்ன தெரியுமா பானு? மற்றொரு ஆடவன்கிட்டே தன் கணவனைப் பத்திக் குறை சொல்றதுதான். அந்தத் தப்பை நீ ரொம்பத் தாராளமாச் செஞ்சே... 'அவரோட வழுக்கைத் தலையைப் பாரேன் ரவி. கூட பெரிய தொந்தி வேறேயா! பாக்கறவங்க எல்லாம், 'உங்க அப்பாவான்னு' என்னைக் கேக்கறாங்க'ன்னு எவ்வளவு தரம் கேலி பண்ணியிருக்கே!

''அன்னிக்கு ஒரு நாள் ரொம்ப சின்ன விஷயம். நான் கொண்டாந்திருந்த கத்திரிக்காய் முத்தலாயிருந்திச்சுன்னு என்னவெல்லாம் பேசினே! 'அவருக்குப் போறாது ரவி. சரியான அசமஞ்சம். என் தலையெழுத்து. அனுபவிக்கிறேன். ஒரு சாமர்த்தியமும் இல்லே. ஆபீஸ்லே இவரோட ஜூனியர் எல்லாம் பிரமோஷன் வாங்கிட்டாங்க. இவரு அப்படியே இருக்காரு. அவ்வளவு ஏன்? உனக்கும் அவருக்கும் எட்டு அல்லது ஒன்பது வயசுதான் வித்தியாசமிருக்கும். நீ எப்படி 'ஜம்'ன்னு இருக்கே. அவரு எப்படி இருக்கார் பாரு'ன்னு அவன்கிட்டேயே என்னைப் பத்திச் சலிச்சுண்டிருக்கே... இது மாதிரி, ஒண்ணா, ரெண்டா, எத்தனையோ சம்பவங்கள்!

''இப்படியெல்லாம் பேசறது, கல்யாணமான, குடும்பப் பெண்ணான உனக்கு சகஜமா இருக்கலாம். ஆனா அதை யார்கிட்டே பேசறேன்றதுதான் முக்கியம். உன் வயசுக்கேத்த பெண்கள்கிட்டேயோ, சொந்த அண்ணன் தம்பிகிட்டேயோ சொல்லியிருந்தாப் பரவாயில்லை. நீ தமாஷாச் சொல்றதை இலேசாவே எடுத்துக்கிட்டு சிரிச்சுட்டுப் போயிடுவாங்க. ஆனா, கல்யாணமாகாத வயசுப் பையன் கிட்டே அல்லது வேறோர் ஆண்கிட்டே சொன்னா, அவனுக்கு என்ன தோணும் தெரியுமா?

''இவளுக்குப் புருஷன்கிட்டே திருப்தியில்லை. இவ வாழ்க்கையிலே குறை இருக்கு. சந்தோஷம் இல்லே'ன்னுதான் தோணும். தப்புத் தப்பான கற்பனைகள் தோன்றும். அந்த எண்ணங்கள் வேரூன்ற வேரூன்றஉன்னைப்பார்க்கிறபோதெல்லாம் மெதுவாகச் சபலம் தலைதூக்கும். அவனையறியாமலேயே சின்னச் சின்ன தப்புகள் பண்ணத் தொடங்குவான். சரியான நேரத்துலே நீ விழிக்கக்கலேன்னா, பெரிய தப்புப் பண்றதுக்கே அவன் துணிஞ்சுடுவான். இப்ப அதுதான் நடந்து இருக்கு'' என்று நிறுத்தியவன் கொஞ்சம் மூச்சு வாங்கிக் கொண்டு தொடர்ந்தான்.

''அப்பவே இதையெல்லாம் ஏன் நீங்க என்கிட்டே சொல்லலேன்னு நீ கேக்கலாம். ஆனா நா அப்பவே சொல்லியிருந்தேன்னா, நீ உடனே, 'தூ! என்ன கேவலமான புத்தி உங்களுக்கு? நீங்க மனுஷன் தானா? எவ்வளவு குறுகிய கண்ணோட்டம்? படிச்சவங்களுக்குப் பரந்த மனப்பான்மை வேணாமா?' அப்படி இப்படின்னு சத்தம் போட்டிருப்பே... 'இதெல்லாம் சரியான பழக்கமில்லே. இதனாலே உனக்குத்தான் பின்னாலே கஷ்டம் வரும்'ன்னு நான் எவ்வளவுதான் சொல்லியிருந்தாலும் நீ ஏத்துக்கிட்டிருக்கப் போறதில்லே...

''சரி, போகட்டும். இதை இப்படியே விட்டுடுவோம். அவன் நல்ல பையன்தான். என்னமோ கொஞ்சம் புத்தி பேதலிச்சுத் தப்பா நடந்துக்கிட்டான். நாளைக்கே அவனுக்கு லெட்டர் போடு. நடந்ததையெல்லாம் நாம ரெண்டு பேரும் பெருந்தன்மையா மறந்து மன்னிச்சுட்டதாவும், அவன் மனசைப் போட்டு உழப்பிக்காம, பயப்படாம, மறுபடியும் நம்ப வீட்டுக்கு சகஜமா வந்துட்டுப் போகலாம்னும் எழுது. நிச்சயம் மனம் திருந்தி, நீ ஆசைப்பட்டபடி, உன் தம்பியா நடந்துப்பான்...''

தான் ஒரு நடமாடும் தெய்வத்தின் சன்னதியில் நிற்பதாக உணர்ந்தாள் பானு.

# பாட்டுக்கு நான் அடிமை



ரயிலில் சந்தித்த ராமராஜனுக்குத் தெரியாத்தனமாய் ரேகா ஒத்தை ரூபாய் கடனாகக் கொடுத்தாலும் கொடுத்தார்; அதைத் தீர்த்தால்தான் தான் மனுஷன் என்று ராமராஜன் படுகிற அவஸ்தை இருக்கிறதே, கோடிக் கடன் பட்டவன் கூடப் பட்டதில்லை.

கடன் தீர்க்கப் பட்டணம் சேர்ந்த ராமராஜனை அவருடைய கொட்டாங்கச்சி வயலின் உலகளாவிய இசையரங்கில் கும்மென்று உயர்த்துவதென்ன, அதற்கு ஒத்தாசை செய்த குஷ்பூ வாழ்ந்தால் ராமராஜனுடன் வாழ வேண்டும் என்ற முடிவுக்கு வந்து நெருக்கிய போது, 'என்னதான் ரேகா என்னை வெறுத்து விரட்டியிருந்தாலும் அவள் குடியிருக்கிற இடத்தில் இன்னொருத்தியைக் குடிவைக்க முடியாது.' என்று கன்னாபின்னாவென்று அவர் இதயத்தை நொறுக்கித் தள்ளி விட அவர் கன்னிகா ஸ்திரீயாக மாறிப் போவதென்ன; இதற்கு நடுவிலே ரேகாவுக்கு ஏற்பாடு செய்திருந்த வெளிநாட்டு மாப்பிள்ளை கடைசி நேரத்தில் கைவிட்டுப் போக, அந்த அதிர்ச்சியில் பெற்றவர் சாக, ரேகாவோ ராமராஜனையே நினைத்து ஏங்கிக் காத்திருப்பதென்ன; இத்தனையும் அறியாத ராமராஜன், ரேகாவிடம் பட்ட ஒரு ரூபாய்க் கடனுக்கு ஒரு லட்ச ரூபாயை எடுத்துச் சென்று முகத்தில் விட்டெறியப் போவதென்ன? ....அப்புறம் ஃபார்முலா தமிழ்ப் பட லட்சணத்தோடு க்ளைமாக்ஸ், முடிவு, சுபம் சுபம் சுபம்.

கண்ணை மூடித் திறந்து கொஞ்சம் கண்ணீர்; மூக்கைச் சுருக்கி உறிஞ்சிக் கொஞ்சம் பிழிசல்; துளியத்தனை இமை தூக்கி லேசாய் விழியுருட்டி கோபம் — இவைதாம் ராமராஜன் அதிகப்படியாகக் காட்ட முடிந்த உணர்ச்சிகள்.

வெள்ளைக்காரக் கும்பலைப் பார்த்துப் பயந்து மேடையிலிருந்து அவர் ஓடப் பார்ப்பதும் ஒவ்வொரு முறையும் ஒவ்வொரு விதமாய்க் குஷ்பூ அவரை இழுத்து வந்து மேடையில் நிறுத்துவதும் கலகலப்பு. அது சரி, மனசுக்குள் குஷ்பூவுக்கு இடம் கொடுக்காத அந்த யோக்கியர், ஒட்டி உறவாட மட்டும் எப்படி சார் அனுமதி கொடுக்கிறார்? அபத்தமாய் இருக்கிறதே!

மகா கண்ணியமும் கொடியசைவுமாய் இதற்கு முன் மிதந்த ரேகா, மலையாளக் கரைப் பக்கம் ஒதுங்கியதில் ஒரு சில துள்ளல் வித்தையும் சுறுசுறுப்பும் கற்றுக் கொண்டு வந்திருப்பது தெரிகிறது. ஆனால் காதலனுடன் ரயிலேறி ஓடிப் போக வந்து நின்றவர், அவனைத் திட்டியனுப்பி விட்டு, அழுத கண்ணீரோடு திரும்பி, காரிலிருக்கும் தகப்பனிடம், 'இப்ப உங்களுக்குத் திருப்தி தானே?' என்று கேட்பது நம்ப முடியாத டிராமா.

அந்த நாள் சுலக்ஷணா படுபாந்தம். சூழ்நிலைக் கைதி மாதிரி கொடுமைக்காரத் தாய்க்கும் தம்பிக்கும் கட்டுப்பட்டு அவர் நடமாட வேண்டியிருக்கிறது. அனுதாபத்தைப் பெறுகிறார். கடைசியில் பொங்கி எழுந்து தம்பியின் கன்னத்தில் அறைந்து 'போடா வெளியே!' சொல்வது ஓகோ!

ரஞ்சன் (லிவிங்ஸ்டன்) அடிதடி சமாசாரங்களில் மட்டும் வெறிகாட்டி வந்தவர், சங்கீத விஷயத்திலும் வெறி காட்டி, 'யோவ், உன் சங்கீதத்திலே பூ உதிருதய்யா,' என்று பாவம் காட்டுவது சூப்பர்.

மேனாட்டு மேடை பொய்யாய் இருந்தாலும் அங்கே பொழிந்ததாய்க் காட்டியிருக்கும் அந்தக் கடைசி மூன்று பாடல்களில் நிஜமாகவே பூக்கள் உதிர்கின்றன. காமெரா வித்தை படு துல்லியம்.

தலைப்பை ரசிகர்களும் சொல்லக்கூடும்.

— பி. எஸ். எஸ்.




அத்தியாயம் 66

## மதுராந்தகன் மறைவு

குதிரையும் தானுமாகத் திடீரென்று உருண்டு விழுந்தும் சிறிதும் மனங்கலங்காத கந்தமாறன், எழுந்திருக்கும் போதே கையில் வேலை எடுத்துக் கொண்டு எழுந்தான். அவனுடைய நோக்கம் ஏற்கெனவே மறு கரையை அணுகிக் கொண்டிருந்த குதிரையின் பேரில் சென்று விட்டது. அக்குதிரை மேல் ஏறிக் கொண்டிருந்தவன் சந்தேகமின்றி வந்தியத் தேவன்தான் என்று அவன் நிச்சயித்துக் கொண்டான்.

வந்தியத்தேவன் பேரில் கந்தமாறன் கொண்டிருந்த பழைய சிநேகம் இப்போது கடும் பகையாக மாறியிருந்தது. பலவிதத்திலும் வந்தியத் தேவன் சிநேகத் துரோகம் செய்து விட்டதாக அவன் எண்ணினான். தனக்கும் தன் குடும்பத்துக்கும் நேர்ந்த அபகீர்த்திக்கெல்லாம் காரணம் வந்தியத் தேவன்தான்! தன் வீட்டில் வந்து தங்கியிருந்தபோது தெரிந்து கொண்ட இரகசியத்தைப் பலரிடத்திலும் சொல்லியிருக்கிறான்; இராஜ குடும்பத்தாரிடமும் கூறியிருக்கிறான். எதற்காக? சோழ குலத்தினிடம் கொண்ட பக்தி விசுவாசம் காரணமாகவா? இல்லவே இல்லை! இந்த இரகசியத்தைச் சொல்லி அவர்களுடைய நம்பிக்கையைச் சம்பாதித்துக் கொண்டு, பிறகு அவர்களுக்கும் துரோகம் செய்வதற்காகத் தான்! பாண்டிய நாட்டு ஆபத்துதவிகளுக்கு அவன் உதவி செய்திருக்கிறான் என்பதில் சந்தேகமில்லை. இந்த இரட்டைத் துரோகத்தை நந்தினியின் தூண்டுதலினால் அவன் செய்தானா, வேறு தன் சொந்த லாபங் கருதியே செய்தானா என்பது தெரியவில்லை. நந்தினியின் மாயவலையில் தானும் சில காலம் சிக்கியிருந்தது உண்மையேதான்! ஆனாலும் இம்மாதிரி பயங்கரத் துரோகச் செயல்களைக் கனவிலேனும் தான் செய்ய எண்ணியிருக்க முடியுமா?

இவற்றையெல்லாம் விடத் தனது அருமைச் சகோதரி மணிமேகலையின் மனத்தைக் கெடுத்து விட்டதன் பொருட்டுக் கந்தமாறனுக்கு வந்தியத் தேவன் மீது அளவில்லாத கோபம் பொங்கிக் கொண்டிருந்தது. மணிமேகலையைச் சாம்ராஜ்ய சிங்காதனத்தில் மணிமகுடம் தரித்துச் சக்கரவர்த்தினியாக வீற்றிருக்கச் செய்ய வேண்டுமென்று கந்தமாறன் ஆசை கொண்டிருக்க, அந்தக் கள்ளங்கபடமற்ற பெண்ணைக் 'கரிகாலரை நான்தான் கொன்றேன்' என்று பலரறியப் பிதற்றும்படி செய்த கொடிய வஞ்சகன் அல்லவா அவன்?

அவ்வளவு பெரிய பாதகங்களைச் செய்தவன் உயிர் தப்பி ஓடும்படி விட்டு விடுவதா? அதைத் தான் பார்த்துக் கொண்டிருப்பதா? ஒரு நாளும் இல்லை! வந்தியத் தேவனை உயிரோடு பிடித்துக் கொண்டு போக முடியுமானால் நல்லது தான்! முடி

அமரர் கல்கி

யாத வரையில், அவனைக் கொன்று தொலைத்து விட்டோம் என்ற ஆறுதலுடனாவது இங்கிருந்து திரும்பிப் போக வேண்டும்..... இந்தத் தீர்மானத்துடனே தான் கந்தமாறன் அந்த மனித வேட்டைக்குப் புறப்பட்டான்.

இப்போது அவனுடைய குதிரை எதிர்பாராத விதமாகத் தடுக்கி விழுந்து விட்டது. அது இனி பிழைப்பதே துர்லபம். வைத்தியர் மகன் பினாகபாணியின் குதிரைக்கும் அதே கதிதான்!

வந்தியத் தேவனோ நதியின் அக்கரையை நெருங்கி விட்டான்!

பின்னால் வந்த வீரர்கள் அங்கு வந்து சேர இன்னும் சிறிது நேரம் பிடிக்கும். அவர்கள் வந்து விட்டாலும் வெள்ளத்தைக் கடந்து அக்கரை சென்று வந்தியத் தேவனைப் பிடிப்பது இயலாத காரியம். ஆகையால் அவனைக் கொன்று விடுவது ஒன்றே செய்யத் தக்கது.....

இவ்வளவு எண்ணங்களும் கந்தமாறனுடைய உள்ளத்தில் சில கண நேரத்தில் தோன்றி மறைந்தன. எனவே, தரையிலிருந்து எழுந்து நின்றதும், கால்களை நன்றாக ஊன்றிக் கொண்டு, கையிலிருந்த வேலை உயர்த்திக் குறி பார்த்துப் பலங் கொண்ட மட்டும் வீசி எறிந்தான்.

வேல் 'விர்' என்ற சத்தத்துடன் சென்று கண்மூடித் திறக்கும் நேரத்தில் மதுராந்தகன் பேரில் பாய்ந்தது.

'வீல்' என்று சத்தமிட்டு விட்டு மதுராந்தகன். தண்ணீரில் விழுந்தான்.

குதிரை மட்டும் தட்டுத் தடுமாறிக் கரை மேல் ஏற முயன்றது.

மிகச் சொற்ப நேரத்துக்குள் நடந்து விட்ட மேற்கூறிய நிகழ்ச்சிகளையெல்லாம் மரக் கிளையிலிருந்து பார்த்துக் கொண்டிருந்த கருத்திருமன், உள்ளம் பதறி உடலும் நடுங்கினான்.

இப்படியெல்லாம் நடக்கக் கூடும் என்று அவன் எதிர்பார்க்கவே இல்லை.

வேகமாக வந்து திடீரென்று தடுக்கி விழுந்த குதிரைகளுக்கு அடியில் அகப்பட்டுக் கொண்டவர்கள் உயிரோடு தப்பி எழுந்தாலும் கைகால் ஒடிந்தவர்களாக எழுந்திருப்பார்கள் என்று அவன் எண்ணியிருந்தான்.

அவன் சற்றும் எதிர்பாராதபடி எல்லாம் நடந்து விட்டது. கீழே விழுந்தவர்களில் ஒருவன் எழுந்து நின்று வேல் எறிந்து, அதுவும் மதுராந்தகன் பேரில் குறி தவறாமல் சென்று பாய்ந்து அவனை வெள்ளத்தில் வீழ்த்தி விட்டது. இதனால் ஏற்பட்ட முதல் அதிர்ச்சியைச் சமாளித்துக் கொண்டு, பயங்கரமான கூக்குரலுடன் கீழே பாய்ந்தான்.

ஆத்திர வெறியினால் ஏற்பட்ட ராட்சத பலத்துடன் கந்தமாறனைத் தாக்கிக் கீழே தள்ளி விட்டு அப்பால் சென்றபோது, அப்போதுதான் தட்டுத் தடுமாறி எழுந்து கொண்டிருந்த வைத்தியர் மகன் அவனைத் தடுக்கப் பார்த்தான். பினாகபாணிக்கு இதற்குள் பிசாசு பயம் நீங்கி, மரத்தின் மேலிருந்தவன் கருத்திருமன் என்பது தெரிந்து போயிருந்தது.

கருத்திருமன் தன் உள்ளத்தில் பொங்கிய கோபத்தையெல்லாம் செலுத்திக் கையிலிருந்த சிறிய கத்தியால் பினாகபாணியைக் குத்திக் கீழே தள்ளி விட்டுப் பாலத்தை நோக்கி ஓடினான்.

அங்கில் மரப் பாலத்தின் மீது ஒரு மனிதன் ஓடுவதைக் கந்தமாறனுக்கும் பினாகபாணிக்கும் பின்னால் குதிரைகள் மீது வந்த வீரர்கள் பார்த்தார்கள்.

தாங்கள் வருவதற்கு முன் நிகழ்ந்தவற்றை ஒருவாறு அவர்கள் ஊகித்துத் தெரிந்து கொண்டு குதிரைகளை அங்கே நிறுத்தினார்கள்.

கந்தமாறன், "பிடியுங்கள்! பிடியுங்கள்! பாலத்தின் மேல் ஓடுகிறவனைப் பிடியுங்கள்!" என்று கூவினான்.

நாலு பேரும் குதிரை மேலிருந்து தடதடவென்று குதித்துப் பாலத்தின் மீது முன்னால் சென்ற கருத்திருமனைத் தொடர்ந்து ஓடினார்கள்.

திடீரென்று இரண்டாவது முறையும் தள்ளப்பட்டுத் தலை குப்புற விழுந்த அதிர்ச்சியினால் சிறிது நேரம் செயலற்றுக் கிடந்த கந்தமாறன் விரைவிலேயே மறுபடியும் சமாளித்துக் கொண்டு எழுந்து அந்த நாலு வீரர்களுக்குப் பின்னால் தானும் ஓடினான்.

கத்தியினால் குத்தப்பட்டுப் படுகாயமுற்றிருந்த வைத்தியர் மகனும் ஆவேசங் கொண்டு எழுந்து அவர்களைப் பின் தொடர்ந்து பாலத்தின்மீது சென்றான்.

ஆனால் ஐந்தாறு அடி எடுத்து வைப்பதற்குள் அவனுடைய ஜீவசக்தி குன்றி விட்டது. கண்கள் இருண்டு வந்தன. தலை சுற்றியது. காலை ஊன்றி நிற்கப் பார்த்தும் முடியாமல் தள்ளாடி நதி வெள்ளத்தில் விழுந்தான்.

அவன் அவ்வாறு விழுந்ததை முன்னால் சென்றவர்கள் யாரும் கவனிக்கவில்லை.

பாவம், எத்தனை எத்தனையோ மனோ ராஜ்யங்கள் செய்து கொண்டிருந்த வைத்தியர் மகன் பினாகபாணி தன்னுடைய துராசைகளில் எதுவும் நிறைவேறப் பெறாதவனாக உயிர் நீத்தான்! அவன் கட்டிய ஆகாசக் கோட்டைகள் எல்லாம் வட வாற்று வெள்ளத்தில் மூழ்கி மறைந்தன! அவனுடைய உடலுக்கும் அந்த நதியில் ஓடிய பெரும் பிரவாகமே சமாதிக் குழி ஆயிற்று!

கந்தமாறனைத் தாக்கித் தள்ளி விட்டு வைத்தியர் மகனைக் கத்தியால் குத்தி விட்டு மூங்கில் பாலத்தின் மீது விரைந்து ஓடிய கருத்திருமன், அந்தப் பாலத்தில் முக்கால் பங்கு தூரம் கடந்ததும் ஒரு கணம் நின்று திரும்பிப் பார்த்தான். அப்போதுதான் குதிரைகள் மீது வந்த ஆட்கள் கீழே குதித்துப் பாலத்தின் முனையை அடைந்திருப்பதைக் கவனித்தான்.

உடனே அவன் ஒரு விந்தையான காரியம் செய்தான். அவன் நின்ற இடத்தில் மூங்கில் கழிகளை ஒன்றோடொன்று சேர்த்துக் கட்டியிருந்ததுடன், கீழேயும் முட்டுக் கொடுத்து நிறுத்தியிருந்தது. பினாகபாணியைக் குத்திய அதே கத்தியினால் அந்தக் கட்டுக்களைச் சடசடவென்று அறுத்து விட்டான். கீழே முட்டுக் கொடுத்திருந்த கழிகளையும் காலினால் உதைத்துத் தள்ளி விட்டு மேலே விரைந்து ஓடினான்.

அக்கரையை அடைந்ததும், அங்கேயும் மூங்கில் கழிகளை மரத்து வேருடன் சேர்த்துக் கட்டியிருந்த கயிறுகளை அறுத்தான். உடனே பாலத்தின் முனையை அப்படியே கைகொடுத்து நெம்பித் தூக்கி அப்புறப்படுத்தி நதியின் வெள்ளத்தோடு விட்டான்.

மறுகணம் அந்த மூங்கிற் கழிப்பாலத்தில் ஏறக்குறைய மூன்றில் ஒரு பகுதி தனியாகப் பிய்த்துக் கொண்டு புறப்பட்டு ஆற்று வெள்ளத்தோடு மிதந்து செல்லத் தொடங்கியது.

பாலத்தின் மேலே ஓடி வந்தவர்கள், அவ்விதம் அங்கே பாலம் பிய்த்துக் கொண்டு போனதைக் கவனியாமல் மேலே மேலே ஓடி வந்து ஒவ்வொருவராக வெள்ளத்தில் விழுந்தார்கள்!

அவர்கள் எல்லாருக்கும் கடைசியாக வந்த கந்தமாறன் மட்டுமே அவ்வாறு ஆற்றில் விழாமல் தப்பினான்.

எதிர்பாராமல் வெள்ளத்தில் விழுந்தவர்கள் தண்ணீரைக் குடித்துத் திணறித் திண்டாடிய பிறகு, வெளியில் தலையை நீட்டினார்கள்.



## அருள்வாக்கு

ராமாயணத்தில் பேர் பாதி ஆகிற வரை ஆஞ்சநேயரை யாரென்றே தெரியாது. கிஷ்கிந்தா காண்டத்தில்தான் வருகிறார். உடனே, இவர்தான் கதாநாயகருக்கும் மேலே என்பது போல் முக்கியமாய் விடுகிறார். அடுத்ததான ஸுந்தர காண்டம் முழுக்க இவர் பிரதாபமும் இவருடைய லீலையுமே! ராமாயணத்தில் ஸர்வ காரிய ஸித்தி என்று ஸகலராலும் பாராயணம் செய்யப்படுவது எது என்றால் ராமருடைய பெருமைகள் தெரிகிற பாக்கி ஆறு காண்டமில்லை; ஆஞ்ஜநேய ப்ரபாவமே விஷயமாயுள்ள ஸுந்தர காண்டம்தான். அப்படி இவரைப் பார்த்தவுடனேயே "ராமாயணத் தேரை இனி மேலே நீயே கொண்டு போ!" என்று ராமர் கொடுத்து விட்டார். தம்முடைய நாமாவை அவர் மூலம் வெளியிட்டே ஸீதை உயிரை விடாமல் காப்பாற்றினார். தம்முடைய நாமாவினாலேயே அவர் ஸமுத்திரத்தைத் தாண்டச் செய்தார். தாமே இலங்கைக்குப் போகிற போது கஷ்டப்பட்டு அணை கட்டிக் கொண்டு அதன் மேல் நடந்துதான் போனார்.

"தாம் செய்வதெல்லாம் ராமர் போட்ட பிச்சையே! ஸீதாதேவியின் அநுக்ரஹ லேசமே" என்றுதான் ஆஞ்ஜநேயர் நினைத்தார். "ஸாகர தாரணமும், லங்கா தகனமும் தன் காரியமென்று லோகம் கொண்டாடுகிறதே! நிஜத்தில் அவருடைய நாமம் — தாரக நாமமல்லவா தாரணம் பண்ணுவித்தது? அவளுடைய சோகமே அல்லவா தஹனம் பண்ணிற்று?" என்றே நினைத்தார். தங்கள் காரியத்துக்கு நம்மையும் ப்ரயோஜனப் படுத்திக் கொண்டார்களே என்று ஸீதா ராமர்களிடம் ஒரே நன்றி. தீர்க்க முடியாத நன்றிக் கடன்பட்டிருப்பதாகவே இவர் நினைத்தார்.

நமக்கானால், நன்றி வாங்கிக் கொள்வதில் போட்டி! 'நாம் பல பேருக்கு உபகரித்தோம்; யாரும் ஸரியாக நமக்குத் திருப்பவில்லை' என்று அபிப்பிராயம். ஸீதா ராமர்களுக்கும் ஆஞ்ஜநேயருக்குமோ, பரஸ்பரம் மற்றவரால்தான் தங்களுக்கு பலம், அவருக்குத் தாங்கள் பிரத்யுபகாரமே பண்ணி முடியாது என்று அபிப்பிராயம்.

இது ராமாயணத்திலே நமக்கு ஒரு பெரிய பாடம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி, சங்கராச்சாரிய சுவாமிகள்.



கந்தமாறன் அவர்களைப் பார்த்து அக்கரைக்கு நீந்திச் சென்று கரையேறும்படி சத்தம் போட்டுக் கட்டளையிட்டான். அவர்களில் இரண்டு பேர் அதைத் தெரிந்து கொண்டு அக்கரையை நோக்கி நீந்திச் சென்றார்கள்.

மற்ற இருவர் மிக மிகப் பிரயாசைப்பட்டு எதிர் நீச்சல் நீந்தி வந்து எஞ்சி நின்ற பாலத்தைப் பிடித்துக் கொண்டு அதன் மேல் ஏறினார்கள்.

அவர்களை முதலில் கந்தமாறன் நன்றாகத் திட்டினான். ஆனால் அவர்களை மறுபடியும் நீந்திப் போகச் சொல்வதில் பயனில்லை என்று உணர்ந்தான்.

எனவே, பாலத்திலிருந்து இன்னும் சில மூங்கில் கழிகளைப் பிடுங்கித் தெப்பத்தைப் போல் கட்டும்படி செய்தான். அதை வெள்ளத்தில் மிதக்க விட்டுக் கந்தமாறனும் மற்ற இருவரும் அதைப் பிடித்துக் கொண்டு மிதந்து அக்கரையை அடைந்தார்கள்.

அதற்குச் சற்று முன்னால் தட்டுத் தடுமாறி அக்கரை சேர்ந்திருந்த மற்ற இரு வீரர்களையும் சந்தித்தார்கள்.

அவர்கள் தாங்கள் கரையேறுவதற்குச் சற்று முன்பே அக்கரை சேர்ந்த மனிதன் இருளில் மறைந்து விட்டதாகவும், இரண்டு குதிரைகள் போகும் காலடிச் சத்தம் கேட்டதாகவும் சொன்னார்கள். குதிரைகளைத் தொடர்ந்து கால்நடையாகப் போவதில் பயனில்லையென்று தாங்கள் நின்று விட்டதாகவும் அவர்கள் கூறினார்கள்.

ஆனால் கந்தமாறன் அவ்விதம் நின்று விடுவதற்கு விரும்பவில்லை. வைத்தியர் மகன் கூறிய சிறையிலிருந்த பைத்தியக்காரன்தான் மரத்திலிருந்து குதித்துத் தன்னைத் தள்ளி விட்டுப் பாலத்தின் மேல் ஓடியவனாக இருக்க வேண்டும். வந்தியத்தேவனைத் தப்புவிப்பதற்காகவே அவன் அவ்விதம் சாலைக்குக் குறுக்கே கயிற்றைக் கட்டி விட்டு மரத்தின் மேல் ஏறிக் காத்திருந்திருக்க வேண்டும். தன்னுடைய வேலுக்கு இரையானவன் வந்தியத்தேவன்தான் என்பதில் ஐயமில்லை. அவன் குதிரை மேலிருந்து வெள்ளத்தில் தலைகுப்புற விழுந்ததை அவன் கண்களாலேயே



பார்த்தாகி விட்டது. ஆயினும் உயிர் பிரிந்த அவனுடைய உடலைக் கண்டுபிடித்துப் பார்த்து விட்டால், அவன் உள்ளம் மேலும் திருப்தி அடையும். ஒருவேளை தஞ்சாவூருக்கே வந்தியத்தேவன் உடலை எடுத்துக் கொண்டு போனாலும் போகலாம். சோழ குலத்துக்கு மாபெரும் துரோகம் செய்த ஒருவனைக் கொன்று கொண்டு வந்த பெருமையை அடையலாம் அல்லவா? அதன் மூலம் சம்புவரையர் குலத்துக்கு நேர்ந்த அபகீர்த்தியையும் ஓரளவு போக்கிக் கொள்ளலாம். வந்தியத்தேவன் தப்பி ஓடிப் போக முயன்றது ஒன்றே அவன் குற்றத்தை நிரூபிக்கப் போதுமான காரணம் ஆகும். ஆதித்த கரிகாலரைக் கொன்றவன் வந்தியத்தேவன் என்பது நிச்சயமாகி விட்டால், அந்தப் பயங்கரமான பழியைச் சம்புவரையர் குலம் சுமக்க வேண்டியிராதல்லவா?

இவ்வாறு யோசனை செய்து கொண்டு கந்தமாறன் வடவாற்றங் கரையோடு கீழ்நோக்கிச் சென்றான். வீரர் நால்வரும் அவனைப் பின்பற்றிச் சென்றார்கள். வந்தியத்தேவனுடைய உடல் எங்கேயாவது கரையில் ஒதுங்கிக் கிடக்கிறதா என்று பார்த்துக் கொண்டே சென்றார்கள். இருளடர்ந்த இரவு நேரத்தில் இந்தக் காரியம் அவ்வளவு சுலபமாக இல்லைதான். ஆயினும் கந்தமாறன் நம்பிக்கையைக் கைவிடாமல் மேலே மேலே போனான். இவ்வாறு வெகுதூரம் போன பிறகு பெரியதோர் அருவி மலையிலிருந்து விழுவது போன்ற ஓசை கேட்கலாயிற்று. அந்த ஓசை எழுந்த இடத்தை நெருங்கிச் சென்று பார்த்த போது, அங்கே நதியின் குறுக்கே ஒரு கலங்கல் கட்டியிருந்தது தெரிய வந்தது. அவ்விடத்தில் தண்ணீர் தேங்கி நின்று, அடுத்தாற்போல் பள்ளத்தில் அதிவேகமாக விழுந்து சுற்றிச் சுழன்று அலைமோதிக் கொண்டு சென்றது.

வந்தியத்தேவனுடைய உடல் அதுவரையில் வந்திருக்குமானால் அந்தப் பெரும் பள்ளத்தில் விழுந்து அமிழ்ந்து போயிருக்கும். மறுபடியும் வெளியில் வருவதற்குப் பல நாட்கள் ஆகும். ஒருவேளை வெளிப்படாமலே மறைந்து போனாலும் போய் விடலாம். ஆகையால் இனிமேலும் தேடிக் கொண்டு போவதில் பயனில்லை...

இவ்வாறு கந்தமாறன் எண்ணிக் கொண்டிருந்தபோதே, நதிக் கலங்கலைத் தாண்டிக் கொண்டு வெண்ணிற நுரை மயமாகப் பொழிந்து கொண்டிருந்த நீரோட்டத்தோடு ஏதோ

மணியம்.

ஒரு கரிய பொருள் விழுவது தெரிந்தது. ஆகா! அது தான் வந்தியத்தேவனுடைய உடலாக இருக்க வேண்டும்! — இந்த மண்ணுலகை விட்டு ஒரு பெரிய துரோகி ஒழிந்து போனான்! அவனுடைய பாவங்களை ஆண்டவன் மன்னிப்பாராக! — ஆனால் அது இயலுகிற காரியமா? அவனுடைய பாவங்களை ஆண்டவனால் கூட மன்னிக்க முடியுமா? முடியாது! முடியாது! அவற்றின் பலன்களை அவன் மறு பிறவியில் அநுபவித்தேயாக வேண்டும் அல்லவா?

எப்படியாவது போகட்டும். இவ்வுலகத்தில் வந்தியத்தேவனுடைய வாழ்க்கை முடிந்து விட்டது. இனி, அவனைப் பற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை. தஞ்சைக்குத் திரும்பிப் போய் மற்றக் காரியங்களைக் கவனிக்கலாம்.

இவ்வாறு கந்தமாறன் முடிவு செய்து கொண்டு வந்த வழியே திரும்பினான்... ஆகா! தஞ்சையிலேதான் அவனுக்கு எவ்வளவு பெரிய ஏமாற்றம் காத்திருந்தது? தான் வேல் எறிந்து கொன்று நதி வெள்ளத்தில் விழச் செய்தவன் வந்தியத்தேவன் அல்ல, — இளவரசன் மதுராந்தகன் என்று அறியும் போது கந்தமாறன் எப்படித் திடுக்கிடுவான்? அவன் காலின் கீழ் பூமி பிளந்து விட்டதாகவே தோன்றினாலும் சிறிதும் வியப்படைவதற்கில்லையல்லவா?

## அத்தியாயம் 67

## "மண்ணரசு நான் வேண்டேன்"



பழுவேட்டரையர்கள் முதலான குறுநில மன்னர்களின் ஊர்வலம் அப்பால் சென்றதும் ஆழ்வார்க்கடியான் தன் ஆட்களுடனே சேந்தன் அமுதனுடைய பூந்தோட்டத்தை நோக்கி நடந்தான். பூந்தோட்டத்துக்குச் சமீபத்தில் ஒரு மரத்தடியில் சற்று மறைவாக மதுராந்தகத் தேவரின் சிவிகையும் அதைத் தூக்கும் ஆட்களும் நின்றார்கள். அவர்களிடம் விசாரித்து இளவரசர் கட்டளைப்படி அவர் திரும்பி வருகைக்காக அவர்கள் காத்துக் கொண்டிருந்ததை அறிந்து கொண்டான். பின்னர் மேலே சென்று பூந்தோட்டத்துக்குள் புகுந்தான். தன்னுடன் வந்தவர்களிடம் மெல்லிய குரலில் அத்தோட்டமெல்லாம் சுற்றித் தேடிப் பார்க்கும்படி கூறிவிட்டுத் தான் மட்டும் குடிசை வாசலில் போய் நின்று கொண்டான். உட்புறம் தாளிட்டிருந்த கதவண்டை காதை வைத்து ஒட்டுக் கேட்கலானான். சேந்தன் அமுதனும் பூங்குழலியும் கவலையுடன் பேசிக் கொள்ளும் குரல்கள் கேட்டன. இடையிடையே யாரோ ஒருவர் மரணாவஸ்தையில் முனகுவது போன்ற சப்தமும் கேட்டது.

தோட்டத்தைச் சுற்றித் தேடப் போனவர்களில் ஒருவன் விரைவில் திரும்பி வந்தான். அவன் கொண்டு வந்த பொருள்களைத் திருமலை நம்பி கதவிடுக்கின் வழியாக வந்த விளக்கின் ஒளிக்கிரணத்தில் உற்றுப் பார்த்தான். அவை இளவரசர் மதுராந்தகத் தேவர் வழக்கமாக அணியும் கிரீடம், இரத்தின ஹாரம், வாகுவலயம் முதலிய ஆபரணங்கள் என்று அறிந்து கொண்டான். அவற்றுடன் மதுராந்தகர் உத்தரீயமாகத் தரிக்கும் பீதாம்பரமும் இருந்தது. இவற்றைப் பார்த்ததும் ஆழ்வார்க்கடியானுடைய மனத்தில் உண்டான திருப்தி அவனுடைய முகத்தில் பிரதிபலித்தது.

"சரி; தேடியது போதும்! மற்றவர்களையும் இங்கே கூப்பிடு. எல்லாரும் கையில் ஆயுதம் ஏந்தி எதற்கும் ஆயத்தமாக நில்லுங்கள்!" என்று கூறிவிட்டு, ஆழ்வார்க்கடியான் குடிசையின் கதவை இலேசாகத் தட்டினான்.

உள்ளிருந்து மறுமொழி வராமற் போகவே, மீண்டும் தடதடவென்று கதவை வலுவாகத் தட்டினான்.

"யார் அங்கே? இங்கு என்ன வேலை?" என்று பூங்குழலியின் குரல் கேட்டது.

"அம்மணி! நான்தான் ஆழ்வார்க்கடியான் என்கிற திருமலை நம்பிதாஸன். தயவு செய்து கதவைத் திறந்து அருள வேண்டும். முக்கியமான காரியம் இருக்கிறது!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

உள்ளே காலடிச் சப்தம் கேட்டது. பூங்குழலி கதவண்டையில் வந்து நின்று, "அப்படி என்ன முக்கியமான காரியம் இங்கே உமக்கு வைத்திருக்கிறது? நீரோ வீர வைஷ்ணவர். இதுவோ சிவனடியார்களின் குடிசை. இந்த வீட்டின் எஜமானருக்கு உடம்பு நலமில்லையென்பது உமக்குத் தெரியும். இரவு நேரத்தில் வந்து எதற்காகத் தொந்தரவு செய்கிறீர்?" என்றாள்.

ஆழ்வார்க்கடியான், "சமுத்திரகுமாரி! நான் வீர வைஷ்ணவன்தான்! அதனாலேயே துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனம் செய்யும் பொருட்டு வந்தேன். கதவை உடனே திறக்காவிட்டால் உடைத்துத் திறக்கப்படும்!" என்றான்.

"வைஷ்ணவரே! அவ்வளவு பெரிய வீராதி வீரரோ நீர்? உமது வீரத்தை எங்களிடம் காட்டவா வந்தீர்?" என்று சொல்லிக் கொண்டே பூங்குழலி குடிசைக் கதவைத்

தடால் என்று திறந்தாள். அவளுடைய கயல் விழிகளில் கோபக் கனல் பறந்தது.

ஆழ்வார்க்கடியான் மீது தன் கோபத்தைக் காட்ட எண்ணியவள் அவனுக்கு அப்பால் வீரர்கள் சிலர் நிற்பது கண்டு திடுக்கிட்டாள். உடனே, கோபத்தைத் தணித்துக் கொண்டு, ''ஐயா! இது என்ன? இவர்கள் யார்? எதற்காக இங்கே வந்திருக்கிறார்கள்? உம்முடனேதான் வந்தார்களா?'' என்றாள்.

''ஆம்; என்னுடனேதான் வந்தார்கள். இராஜாங்கக் காரியமாக வந்திருக்கிறார்கள். இவர்களுடைய காரியத்தைத் தடை செய்கிறவர்கள் இராஜ தண்டனைக்கு உள்ளாக நேரிடும்!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''நல்ல இராஜாங்கக் காரியம்; நல்ல இராஜ தண்டனை. இந்த மாதிரி பேச்சுக்களையெல்லாம் கேட்காமல் எப்போது கோடிக்கரைக்குப் போய்ச் சமுத்திரத்தின் அலை ஓசையைக் கேட்டுக் கொண்டு நிம்மதியாக இருக்கப் போகிறோம் என்றிருக்கிறது. போகட்டும்; இவர்களையெல்லாம் கொஞ்சம் தூரத்தில் இருக்கச் சொல்லி விட்டுத் தாங்கள் மட்டும் உள்ளே வாருங்கள். இந்த ஓட்டைக் குடிசைக்குள்ளே என்ன இராஜாங்கக் காரியம் வைத்திருக்கிறதோ, தெரியவில்லை. அதைப் பார்ப்பதற்குத் தாங்கள் ஒருவரே போதாதா? அத்தான் அதோ கட்டிலில் படுத்து வேதனைப்பட்டுக் கொண்டிருக்கிறார். இவர்கள் உள்ளே வந்தால் அவர் திடுக்கிடுவார். அதனால் அவர் உடம்பு இன்னும் சீர்கேடடையும்!'' என்றாள்.

ஆழ்வார்க்கடியான் குடிசைக்குள் பிரவேசித்ததும் அவனாகவே கதவை மறுபடியும் சாத்தித் தாளிட்டான்.

பூங்குழலி! உன்னுடைய வார்த்தை மிக்க வியப்பாயிருக்கிறது. இராஜாங்கக் காரியங்களின் பேரில் உனக்கு இவ்வளவு அருவருப்பு எப்போது உண்டாயிற்று? பட்டத்து இளவரசரை மணந்து சிங்காதனம் ஏறும் உத்தேசம் என்ன ஆயிற்று? அவ்வாறு நடக்கும் போது இராஜாங்கக் காரியங்களில் முழுக்க முழுக்கக் கவனம் செலுத்தித்தானே ஆக வேண்டும்?'' என்றான் திருமலை.

''ஐயா, வைஷ்ணவரே! அந்த உத்தேசத்தை நான் அடியோடு விட்டு விட்டேன். சென்ற சில தினங்களில் இராஜ்யபாரம் தாங்குவது என்பது எவ்வளவு சங்கடமான காரியம், எத்தனை மனவேதனை தரும் விஷயம் என்பதைத் தெரிந்து கொண்டேன். சிங்காதனம் இருக்குமிடத்துக்குப் பத்து காத தூரத்திலே வருவதற்குக் கூட இனி நான் பிரியப்பட மாட்டேன். வைஷ்ணவரே! உமக்கு ஒரு சந்தோஷச் செய்தி தெரிவிக்கிறேன். என் அத்தான் சேந்தன் அமுதனை மணந்து கொள்ள நான் முடிவு செய்து விட்டேன். சற்று முன் இங்கு வந்த செம்பியன் மாதேவியிடம் சொல்லி அவருடைய ஆசியும் பெற்றுக் கொண்டோம். அமுதனுக்கு உடம்பு கொஞ்சம் குணமானதும் இருவரும் கோடிக்கரைக்குப் புறப்பட்டுப் போய் விடுவோம்.....''

ஆழ்வார்க்கடியான் குறுக்கிட்டு, ''ஆகா! நல்ல தீர்மானம் செய்தீர்கள்!

**ஆனாத செல்வத்து அரம்பையர்கள் தற்சூழ**
**வானாளும் செல்வமும்**
**மண்ணரசும் யான் வேண்டேன்**
**தேனார் பூஞ்சோலை திருவேங்கடச் சுனையில்**
**மீனாய்ப் பிறக்கும் விதியுடையே னாவேனே!**

என்று ஆழ்வார் அருளிச் செய்திருக்கிறார் அன்றோ? அதுபோல் நீங்களும் இந்த 'மண்ணரசு வேண்டாம்' என்று தீர்மானித்துக் கோடிக்கரைக் கடலில் மீன்களோடு மீன்களாக வாழலாம் என்று எண்ணினீர்கள் போலும்! ஆனாலும் யார் கண்டது? சிரஸிலே கிரீடத்தைச் சுமந்து சிங்காதனத்தில் வீற்றிருக்க வேண்டும் என்கிற விதி இருந்தால், அந்தப்படியே நடந்து தீரும். வேண்டாம் என்றாலும் விடாது!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''போதும் ஐயா, பரிகாசம்! எதற்காக இங்கு வந்தீர்கள் என்பதைச் சொல்லுங்



**இவன்: என் மனைவி சம்பாத்யத்தை மட்டும் வச்சுக்கிட்டு நான் சாப்பிடறதா இனிமே யாரும் சொல்ல முடியாது!**

**அவன்: நீயும் சம்பாதிக்க ஆரம்பிச்சுட்டேன்னு சொல்லு!**

**இவன்: இல்லே! என் சின்ன வீடும் சம்பாதிக்க ஆரம்பிச்சுட்டா!**

**— எல். புவனா.**



''அவர் பெரிய பணக்காரர் போலிருக்கு!''

''எப்படி கண்டுபிடிச்சே?''

''பெருமூச்சு விடும் போது ''ஸ்விஸ்... ஸ்விஸ்''னு பெருமூச்சு விடறாரே!''

— ஷோபனா வெங்கட்ராமன்.

கள்!'' என்றாள் பூங்குழலி.

''அம்மணி! தாங்கள் 'மண்ணரசு ஆளும்' ஆசையை மட்டும் விட்டொழித்திருக்கிறீர்களா? அல்லது தாங்களும் சேந்தன் அமுதனும் இந்த மண்ணுலகில் உயிரோடு வாழும் ஆசையையே விட்டொழித்து விட்டீர்களா? இதைத் தெரிந்து கொண்டு போகவே வந்தேன்!'' என்றான் வைஷ்ணவன்.

''இது என்ன கேள்வி? இம் மண்ணுலகில் இன்னும் சில காலம் வாழும் ஆசை எங்கள் இருவருக்கும் இருக்கிறது. இன்றைக்குத்தானே நாங்கள் திருமணம் செய்து கொள்ளத் தீர்மானித்திருக்கிறோம்? வைஷ்ணவரே! எங்களுக்கு வாழ்த்துக் கூறுங்கள்! அத்தான் விரைவில் குணமடையுமாறும் ஆசி கூறுங்கள்!'' என்றாள் பூங்குழலி.

''நான் வாழ்த்துக் கூறவும் ஆசி கூறவும் சித்தமாயிருக்கிறேன். ஆனால் என் வாழ்த்தும் ஆசியும் வீணாகப் போகலாகாது. உங்களிருவருக்கும் இவ்வுலகில் உயிரோடு வாழும் எண்ணம் இருந்தால், பாதாளச் சிறையிலிருந்தவர்கள் தப்பி ஓடுவதற்கு ஏன் உதவி செய்தீர்கள்?'' என்று கேட்டான் திருமலை.

பூங்குழலி முகத்தில் வியப்பை வருவித்துக் கொண்டு, ''இது என்ன? எங்களுக்கு ஒன்றுமே தெரியாதே? யாரும் தப்பி ஓடுவதற்கு நாங்கள் உதவி செய்யவே இல்லையே?'' என்றாள்.

''கரிகாலரைக் கொன்றவன் என்று குற்றம் சாட்டப்பட்டுப் பாதாளச் சிறையிலிருந்த வந்தியத்தேவனும் மற்றொரு பைத்தியக்காரனும் இன்று தப்பிச் சென்று விட்டார்கள். அவர்கள் இந்த நந்தவனம் வரையில் வந்ததாகத் தெரிகிறது. பிறகு, இங்கிருந்து இரண்டு குதிரைகளில் இருவர் ஓடிப் போயிருக்கிறார்கள். இந்தக் குடிசைக்குப் பக்கத்தில் ஓரிடத்தில் மண்ணில் இரத்தம் சிந்தியிருக்கிறது. பலர் இந்த இடத்துக்கு வந்து போன அடையாளங்களும் இருக்கின்றன. ஆகையால் நீங்கள் தான் தப்பி ஓடியவர்களுக்கு உதவி செய்திருக்க வேண்டுமென்று அனுமானிக்கப்படுகிறது. முதன் மந்திரி அநிருத்தருக்கு உங்கள் பேரில் உள்ள அபிமானத்தினால் என்னை அனுப்பி வைத்தார். கொடும்பாளூர் வேளாரின் ஆட்கள் வந்திருந்தால் உங்களை உடனே சிறைப்படுத்தியிருப்பார்கள்!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''முதன் மந்திரிக்கும் உங்களுக்கும் மிக்க நன்றி. வைஷ்ணவரே! அத்தானுக்கு இன்னும் இரண்டு தினங்களில் உடம்பு சரியாகி விடும். உடனே நாங்கள் புறப்பட்டுக் கோடிக்கரை போய் விடுகிறோம். அப்புறம் இந்தத் தஞ்சாவூர்ப் பக்கமே எட்டிப் பார்ப்பதில்லை. அதுவரையில் தாங்கள்தான் எங்களை இராஜ சேவகர்கள் யாரும் தொந்தரவு செய்யாமல் உதவி புரிய வேண்டும்!'' என்று வேண்டினாள் பூங்குழலி.

''நான் உதவி புரிவதில் தடையில்லை. ஆனால் நீங்கள் உண்மையைச் சொல்ல வேண்டும்! இங்கே உங்கள் மூன்று பேரையுந் தவிர வேறு யாருமே வரவில்லையா?'' என்று கேட்டான்.

''ஏன் வரவில்லை? இப்போது நீங்கள் வந்திருக்கிறீர்கள்! சற்று முன்னால் செம்பியன்மாதேவியும் இளவரசர் மதுராந்தகரும் வந்து அத்தானின் உடம்பைப் பற்றி அன்புடன் விசாரித்து விட்டுப் போனார்கள். இப்போதுதான் தஞ்சாவூர்க் கோட்டையைச் சுற்றி எங்கே பார்த்தாலும் போர் வீரர்களின் நடமாட்டமாயிருக்கிறதே? யார் வந்தார்களோ, யார் போனார்களோ, எங்களுக்கு எப்படித் தெரியும்? வைஷ்ணவரே! நீங்கள் முதலில் கேட்ட கேள்விக்கு மட்டும் மறுமொழி நிச்சயமாகச் சொல்லுகிறேன். இங்கிருந்து தப்பிப் போவதற்கு நாங்கள் யாருக்கும் உதவி செய்யவில்லை.....!''

''இது சத்தியமான வார்த்தையா?''

''ஆம்; சத்தியமாகச் சொல்கிறேன். இங்கிருந்து யாரும் தப்பி ஓடுவதற்கு நாங்கள் உதவி செய்யவில்லை!''

''அப்படியானால், சிறையிலிருந்து தப்பி ஓடி வந்த வந்தியத்தேவன் இந்தக் குடிசையிலேதான் இப்போது இருக்க வேண்டும்!'' என்றான் திருமலை.

அவன் இவ்விதம் சொல்லி வாய் மூடுவதற்குள் சேந்தன் அமுதன் படுத்திருந்த கயிற்றுக் கட்டிலின் அடியிலிருந்து வேதனை நிறைந்த பரிதாபமான முனகல் சப்தம் கேட்டது.

(தொடரும்)

# உங்களுடைய குழந்தையின் உணவுடன் அநேகமாக தண்ணீர் கலந்துதான் கொடுக்கிறீர்கள். அது பாதுகாப்பாய் இருப்பதற்கு நீங்கள் உறுதிசெய்து கொள்ள வேண்டாமா ?

பராமரிப்பிற்கும், போஷாக்கிற்கும் உங்கள் குழந்தை உங்களைத்தான் நம்பி இருக்கிறது. குழந்தையின் ஆரோக்கியத்திற்கு பாதுகாப்பான குடிநீர் மிகவும் அவசியம் என்பதை அறிந்துள்ள நீங்கள், எவ்வளவு வேலை மும்முரத்துடன் இருப்பினும், குடிநீர் சுத்தமாக இருக்கிறதா என்று நிச்சயம் செய்து கொள்கிறீர்கள். அதற்காக தினமும் தண்ணீரை வடிகட்டி, கொதிக்க வைத்து, குளிர வைக்கிறீர்கள்.

அவ்வாறு தண்ணீரை குளிர்விக்கும் போதும், கையாளும் போதும், பிடித்து வைக்கும் போதும், மீண்டும் தண்ணீரில் மாசு கலக்கும் அபாயத்தை முற்றிலும் உங்களால் தவிர்க்க முடியாது.



உங்களுடைய வீட்டிற்கு வந்து இலவச செய்முறை விளக்கமளிக்க எழுதுங்கள்:

**யுரேகா ஃபோர்ப்ஸ் லிமிடெட்,**
நால் பெட்டி எண் 936, ஜிபிஓ பம்பாய்-400 001.
இன்றே உங்களுக்கு அருகாமையிலுள்ள
அக்குவாகார்டு அலுவலகத்துடன் தொடர்பு கொள்க:

சுத்தமான, பாதுகாப்பான உடனே குடிக்கத் தயாரான தண்ணீரை சுவிட்சை தட்டிய உடனே வழங்குவதற்கு ஒப்பற்ற முறையில் உருவாக்கப்பட்டுள்ளது – அக்குவாகார்டு!

இனி தண்ணீரைக் கொதிக்க வைத்தல், குளிர்வித்தல் போன்ற தொல்லைகள் இல்லை. நீங்கள் குழந்தையின் ஆகாரத்தை அக்குவாகார்டின் தண்ணீரில் நேரடியாக தயாரிக்கலாம் . . . அது பகலாயினும் இரவாயினும் சரி.

உங்களுடைய குடும்பத்தினர்க்கு அக்குவாகார்டு தண்ணீர் வழங்கும் நம்பிக்கையை அளியுங்கள்.

அகமதாபாத்: 446982, பெங்களூர்: 224453, பரோடா: 322681, பம்பாய்: 2047870, கல்கத்தா: 347799, கொச்சி: 352736, கோவை: 43180, டில்லி: 6416143, ஃபரிதாபாத்: 22645, ஹூப்ளி: 73291, ஹைதராபாத்: 844128, ஜெய்ப்பூர்: 70205, ஜம்மு: 42586, ஜாம்ஷெட்பூர்: 24470, லூதியானா: 26877, சென்னை: 863309, மங்களூர்: 32445, சூரத்: 54224, திருச்சி: 41867, திருவனந்தபுரம்: 79570, விஜயவாடா: 65964, விசாகபட்டினம்: 53009, பூனே: 668773/667968

## அக்குவாகார்டு சுத்தமான, பாதுகாப்பான குடிநீருக்கு.

ஆன்-லைன் வாட்டர் :பில்டர்-கம்-ப்யூரி:ஃபையர்.

# சிக்னல்

சரேலென்று ஒரு கறுப்பு நிறக் கார் சிவப்பு சிக்னலை அலட்சியப்படுத்தி விட்டுப் படுவேகமாய்ச் சென்று கொண்டிருந்தது. சிக்னல் கம்பத்திற்கு ஓரமாய் நின்று கழுகுப் பார்வை பார்த்துக் கொண்டிருந்த சார்ஜண்ட் குகநேசனின் கண்ணில் அது படாமலில்லை.

அது போக்குவரத்து நிறைந்த பிரதான சாலை. அடிக்கடி அங்கு ட்ராபிக்ஜாம் ஆவதுடன் விபத்துகளும் நடப்பதுண்டு.

இப்போது இப்படியொருவன் ட்ராபிக் விதிமுறைகளை அலட்சியப்படுத்தி விட்டுச் செல்கிறானென்றால்.....

குகநேசன் புல்லட்டை உதைத்துக் கிளப்பினார். இரண்டே நிமிடத்தில் அந்தக் காரை ஒரு திருப்பத்தில் மடக்கினார்.

இலாகா தோரணையில் விசாரித்தார்.

''ஏம்பா டிரைவர்? என்ன நினைச்சுக்கிட்டிருக்கே நீ? சிவப்பு சிக்னலை க்ராஸ் பண்ணிட்டா வர்றே?''

டிரைவர் அவரை அலட்சியமாய்ப் பார்த்தான்.

''மரியாதை கொடுத்துப் பேசுங்க சார்ஜண்ட். அவசரமா ஒரு வேலையாப் போயிக்கிட்டிருக்கேன். அதான் சிக்னலை க்ராஸ் பண்ண வேண்டி வந்தது.''

''எல்லோருக்கும்தான் அர்ஜண்டா வேலையிருக்கு. அதுக்காக எல்லோரும் இப்படிப் போனா என்ன ஆகும்? உன்கிட்ட லைசென்ஸ் இருக்கா?''

லைசென்ஸை எடுத்துக் காட்டினான். நேஷனல் பர்மிட்டும் வைத்திருந்தான். அவர் சீரியஸாகப் பார்த்தார்.

''பேரென்ன?''

''குணசீலன்.''

சார்ஜண்ட் புல்லெட்டுக்குச் சென்று கேஸ் பதிவு புத்தகத்தைக் கொண்டு வந்தார். அவன் காரிலிருந்து இறங்கிக் கொண்டான். வேட்டியைச் சரிப்படுத்திக் கொண்டு சிகரெட்டைப் பற்ற வைத்தான்.

''ஐயா இந்த இடத்துக்குப் புதுசு போல இருக்கு.''

''அநாவசியமாப் பேச வேண்டாம். சார்ஜ்ஷீட் எழுதித் தரேன். கோர்ட்ல வந்து பேசிக்க.''

''நான் சொல்ல வேண்டியதைச் சொல்லிடறேன். அப்புறம் உங்க இஷ்டம். எனக்குக் கட்சி மேலிடத்துலேருந்து அவசரமா வரச் சொல்லி அழைப்பு வந்திருக்கு. என்னை இப்படி வழியில நிறுத்தி அநாவசியமாத் தொல்லை கொடுத்தீங்கன்னா அப்புறம் நீங்க வருத்தப்பட வேண்டியிருக்கும்.

''என்ன?''

''உங்க நல்லதுக்குத்தான் சொல்றேன். அப்புறம் உங்க இஷ்டம்.''

சார்ஜண்ட் அப்போதுதான் கவனித்தார். கார் 'பானெட்'டின் மீது ஆளும் கட்சியின் கொடி பறந்து கொண்டிருந்தது. அவன் நின்றிருந்த தோரணையும் அவருக்கு அச்சத்தைத் தந்தது.

'என் வீண் வம்பு? இவனைப் பிடித்துக் கேஸ் எழுதி விடுவதால் நாளை நாடு பூராவும் ட்ராபிக் ஒழுங்குமுறை சீர்பட்டு விடுமா? இந்தப் பாவி ஏதாவது நம் மீது மேலிடத்தில் வத்தி வைத்தால் சர்வீஸ் புக்கில் கறுப்புப் புள்ளி வைத்துக் கண்ட கண்ட இடங்களுக்கு இழுக்கடித்தால் யார் அனுபவிப்பது? குழந்தைகளுக்குப் பள்ளியில் அட்மிஷன் தேடிக் கொண்டு யார் அல்லல்படுவது? இத்தனையும் இவன் ஒருவனால் தேவைதானா?'

முகத்தில் இருந்த கடினத் தன்மையைத் தளர்த்தினார்.

''என்ன இருந்தாலும் நீங்க இப்படி ட்ராபிக் விதிமுறைகளை அலட்சியப்படுத்துறது சரியில்லை. ஒரு பொறுப்பான கட்சித் தொண்டரா இருக்கிற நீங்களே இப்படிப் பண்ணினா மத்தவங்களை நான் எப்படி கண்ட்ரோல் பண்ண முடியும்?''

''ஆமாம் சார். இருந்த அவசரத்துல சிக்னலை கவனிக்காம வந்துட்டேன்.''

''பை சான்ஸ் ஓர் ஆக்ஸிடெண்ட் ஆயிருந்துச்சுன்னு வச்சுக்கோங்க. யாரைக் கேட்பாங்க? என்னைத்தானே இலாகா நிறுத்தி வைச்சுக் கேட்கும்?''

''ஆமாம் சார். உங்களுக்கும் இதனால அநாவசியத் தொல்லைதான். இனிமே இப்படி நடக்காதபடிக்குப் பார்த்துக்கறேன்.''

''சரி பார்த்துப் போயிட்டு வாங்க.''

''ரொம்ப நன்றி சார்.''

குணசீலன் காரில் ஏறி அமர, சார்ஜண்ட் தம் வழியை அனுசரித்தார்.

ஒரு வாரத்திற்குப் பிறகு — வேறு ஒரு ட்ராபிக் ஜங்ஷனில் அவருக்கு டியூட்டி போட்டிருந்தது. அது ஒரு காலை நேரம்.

வாகனங்கள் எப்படியும் நகர வழியில்லாதபடிக்கு ஜாமாயிருந்த ட்ராபிக்கைச் சீர்படுத்தி விட்டுச் சாலையோரமாய் ஒதுங்கினார் குகநேசன். ஹோட்டலிலிருந்து டீ வரவழைத்துக் குடித்தார். அப்போது 'ட்ரிங்...' என்ற ஓசையைத் தொடர்ந்து அந்த ஒயர்லஸ் அறிவிப்பு வந்தது.

''விக்டோரியா பார்க் அருகே ஐந்து

நிமிடத்திற்கு முன்பு அளவுக்கு மீறிய வேகத்துடன் ஒரு கறுப்பு நிறக் கார் ஓவர் டேக் செய்து சைக்கிள் ஒன்றின் மீது மோதியது. சைக்கிளை ஓட்டி வந்தவர் படுகாயங்களுடன் ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் செல்லப்பட்டிருக்கிறார். காரை ஓட்டி வந்த டிரைவர் கைது செய்யப்பட்டு காந்தி ஸ்கொயர் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் செல்லப்பட்டிருக்கிறார். அவரைப் பற்றி ஏற்கெனவே கேஸ்கள் ஏதாவது பதிவாகியிருந்தால் சம்பந்தப்பட்ட சார்ஜன்டுகள் போலீஸ் ஸ்டேஷனுடன் தொடர்பு கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.



சார்ஜன்ட் குகநேசன் புல்லட்டைக் கிளப்பினார். விபத்து ஏற்பட்டிருந்த இடத்தை அடைந்தார். பளிச்சென்று அந்தக் கறுப்பு நிற அம்பாஸிடர் கண்ணில் பட்டது. ஒரு வாரத்திற்கு முன்பு அவர் மடக்கிய அதே கார். 'பானெட்'டில் இன்னமும் அந்தக் கட்சிக் கொடி பறந்து கொண்டிருந்தது. சாலையில் குறுக்கும் நெடுக்குமாய் ரத்தக் கீறல்கள். சைக்கிள் கோணல் மாணலாய்த் தன் உரு மாறியிருந்தது.

ஏற்கெனவே அந்த இடத்திற்கு வந்திருந்த ட்ராபிக் கான்ஸ்டபிள்களும், சார்ஜன்டுகளும் போக்குவரத்தைச் சீர்படுத்திக் கொண்டிருந்தனர்.

குகநேசன் நேரே காந்தி ஸ்கொயர் போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்றார். அங்கு ஏற்கெனவே இரண்டு போலீஸ் அதிகாரிகள் வந்திருந்தனர். அவர் எதிர்பார்த்தது போலவே குணசீலன் அங்கு இருந்தான்.

கைகளிரண்டும் மேலே கட்டப்பட்ட நிலையில், இன்ஸ்பெக்டர் குரூரமாய் அவனைக் கிரிமினல் விசாரணை செய்து கொண்டிருந்தார்.

"ம்! சொல்லு நீ யார்? எத்தனை நாளா இந்தத் தொழில் செஞ்சிக்கிட்டிருக்கே?"

அவனிடம் பந்தா எல்லாம் பறந்து போயிருந்தது. முகத்தில் இருள் மண்டியிருந்தது.

"ஐயா இதெல்லாம் எதுவும் எனக்குத் தெரியாதுங்கய்யா. யாரோ எனக்குத் தெரியாம டிக்கியில சரக்கைக் கொண்டு வந்து வைச்சுட்டாங்கய்யா."

இன்ஸ்பெக்டர் பலமாய் அவன் தலைமுடியைப் பற்றி உலுக்கினார். "இதப் பார். உனக்கு உயிர் மேல ஆசையிருந்தா உண்மையைச் சொல்லிடு. உன் கூட்டாளிங்க எங்கே இருக்காங்க? எந்த இடத்துக்குச் சரக்கைக் கொண்டு போயிக்கிட்டிருந்தே?"

குகநேசன் குழப்பத்துடன் சுற்றிலும் பார்த்தார். என்ன சரக்காய் இருக்கும்?

மேஜைப் பக்கமாய்ப் பார்வையை நகர்த்திய போது அத்தனையும் கண்ணில்பட்டது. பிளாஸ்டிக் உறையில் கிலோ கணக்கில் போதை வஸ்து. ரூபாய் இருபது லட்சத்திற்கு மேல் மதிப்புப் பெறும் போதைப் பொருள்!

கான்ஸ்டபிள்கள் கார் டிக்கியிலிருந்து பறிமுதல் செய்த அத்தனையும் சோதனையிட்டுக் கொண்டிருந்தார்கள். ஒரு பெட்டி

மதுமனோ

யைத் திறந்ததும் பல்வேறு கட்சிக் கொடிகள் அதில் இருந்தன. வெளியே எடுத்துப் போட்டதும் அனைவரும் பிரமித்துப் போனார்கள்.

இன்ஸ்பெக்டரின் கோபம் மேலும் அதிகரித்தது.

''என்னடா இது? பிராடுப் பயலே! எதுக்காக இத்தனை கட்சிக் கொடிகளை வைச்சுக்கிட்டிருக்கே? வேற என்ன அன்டர் கிரவுண்ட் வேலை பண்றே?''

அவரது கரம் ஓங்கிய வேகத்தைப் பார்த்ததும் அவன் பயத்தில் படபடவென்று அத்தனையும் கொட்டி விட்டான். ''சார் அது வந்து... நான் எந்தக் கட்சிக்காரனும் இல்லீங்க. எனக்கு அரசியல்லே எல்லாம் ஈடுபாடு கிடையாது. நான் ஊரை விட்டு ஊர் போகும் போது எந்தெந்த மாகாணத்துல என்னென்ன ஆளுங்கட்சியிருக்கோ அந்தக் கட்சியோட கொடியைக் கார் பானெட்ல சொருவிடுவேன். யாரும் வழியில மடக்காம இருக்கிறதுக்குத்தாங்க இப்படியொரு வழிய நானா ஏற்படுத்திக்கிட்டேன்.''

குகநேசன் இரண்டடி முன்னே வைத்து ஆத்திரத்துடன் அவன் முகத்தை வெடுக்கென்று நிமிர்த்தினார்.

''டேய் ராஸ்கல்! போன வாரம் சிவப்பு சிக்னலை க்ராஸ் பண்ணிட்டு, கேட்டதுக்கு என்ன சொன்னே?''

அவன் அவரைக் கண்டதும் தடுமாறினான். பதில் சொல்ல இயலாதவனாய் பயப்பிராந்தியுடன் பார்த்தான்.

''செய்யறது கடத்தல் வேலை. பாதுகாப்புக்காக கட்சியோட பேரையா இழுக்கறே? அரசியல் சம்பந்தமேயில்லாத உங்களை மாதிரி அண்டர்கிரவுண்ட் பேர் வழிகளால தாண்டா கட்சிப் பேரே கெட்டுப் போவுது. அன்னைக்கு நான் உன்னைத் துரத்தி மடக்கினப்பவும் எதையோ கடத்திக்கிட்டுத் தானே போனே? சொல்லு?''

பதிலில்லை.

இன்ஸ்பெக்டர் பொறுமையிழந்தார். அவனது மௌனத்தைக் கலைக்கும் வகையில் ஓங்கி ஒரு குத்து விட்டார்.

''கும்!''

---

## நெற்றியில் தழும்பா?



●● நெற்றியில் குங்குமமோ, திருநீறோ வைத்து, வைத்து அந்த இடம் கருமையாகவோ, அல்லது வெள்ளைப் புள்ளியாகவோ ஆகி விட்டால், அதற்கு இதோ ஒரு எளிய, செலவேயில்லாத மருத்துவம்.

ஒரு வாழைப் பழத்தைத் தின்று விட்டு வாழைத் தோலை எறிந்து விடாதீர்கள். 'வாழைத் தோல்' தான் மருந்தே. நார்ப் பகுதியைச் சுரண்டி விட்டு வெறும் தோலை இரவில் படுக்கப் போகும் போது கரும்புள்ளி அல்லது வெண்புள்ளி உள்ள நெற்றிப் பகுதியில் அழுந்த ஒட்டி விட வேண்டும். காலையில் எழுந்து முகம் கழுவும் போது எடுத்து விட வேண்டும். இதுபோல் இருபது நாட்கள் தொடர்ந்து செய்து வந்தால், அந்த இடம் மற்றப் பகுதி போல் 'பளிச்'தான்! இது அனுபவம் கண்ட உண்மை.

— ஸ்வீட் ரவி.

---

## சிவராத்திரியில் கோவிந்த நாமம்!

கன்னியாகுமரி மாவட்டத்தில் பத்மனாபபுரத்தை மையமாகக் கொண்டு பன்னிரண்டு பழம்பெரும் சிவாலயங்கள் உள்ளன. இவை சுமார் ஐம்பது மைல் சுற்றளவில் அமைந்துள்ளன. சிவராத்திரி தினத்தன்று பக்தர்கள் இந்தக் கோவில்களை ஓடிச் சென்று வழிபடுகின்றனர்!

சிவராத்திரி அன்று அதிகாலை இரண்டு மணிக்குத் திருமலை என்ற ஊரிலிருந்து தங்கள் தரிசன ஓட்டத்தைப் பக்தர்கள் ஆரம்பிப்பார்கள். வரிசைப்படி கோவில்களை ஓடிச் சென்று வழிபடுவர். இந்த ஓட்டம் திருநாட்டாலம் கோவிலில் முடிவுறும். மஞ்சள் ஆடை அணிந்து, ''கோவிந்தா, கோவிந்தா.'' என்று துதித்துக் கொண்டே செல்வர். சிவராத்திரி தினத்தன்று கோவிந்த நாமம் துதிப்பது வேறெங்கும் கிடையாது.

— ரமா ராமநாதன்..



**திருமதி ஷீலா பால், BSc., D.N.D.,**
**உணவியல் வல்லுநர் கூறுகிறார்.**

"நல்லெண்ணெய் இரத்தத்தில் கொலஸ்ட்ரால் அளவைக் குறைக்கின்றது ஆகவே தான் நமது முன்னோர்கள் அதை "நல்ல எண்ணெய்" (தமிழ்) "மஞ்ச்சி நூனு" (தெலுங்கு) என்று அழைத்தனர். இது உடல் ஆரோக்கியத்திற்கு பாதுகாப்பானது என்பதால்தான் தென்னிந்தியர்கள் சமையல் எண்ணெய்யாகப் பயன்படுத்துகின்றனர்."

Sheila Paul



Mrs. Sheila Paul B.Sc.,
Diploma in Nutrition & Dietetics
Senior Dietitian
Madras



இதயம் நல்லெண்ணெய் தயாரிப்பில் தரத்தில் சிறந்த எள் மட்டுமே உபயோகிக்கப் படுகின்றது. பிஞ்சு எள் மற்றும் பொக்கு முழுவதுமாக நீக்கப்படுகின்றது. ஆகவே இதயம் நல்லெண்ணெய் பொங்குவதில்லை. பூரி, வடை, பஜ்ஜி எது வேண்டுமானாலும் தயார் செய்யலாம். இதயம் சுகமாக்கும் எதையும் சுவையாக்கும்




**இதயத்திற்கு இதமானது**

# இதயம்
## நல்லெண்ணெய்

Silverspoon/012

# ஊருக்கு ஒதுக்குப்புறம்

புழுதிப் படலத்துடன் அந்த டீக்கடையின் முன் வந்து நின்ற காரைச் சுற்றி சிறுவர்களின் படையெடுப்புப் படலம் நடந்தது.

''பஞ்சுத் தேவர் வீடு எங்கேயிருக்கு?'' — காருக்குள்ளிருந்த நால்வரில் ஒருவன் விசாரித்தான்.

''பஞ்சுத் தேவர் வீடுங்களா? கொஞ்ச தூரம் போயி, வடக்கால திரும்பினா, பெரிய மாடி வீடு தெரியும். அதுதாங்க! ஆமா, நீங்க உறவா...?''

''இல்லீங்க. அவருகிட்டே இருக்கிற பெரிய இடத்தை விலைக்கு வாங்கி, அதிலே சினிமாக் கொட்டகை கட்டலாம்னு வந்திருக்கோம். நன்றிங்க...''

''அப்ப இந்த ஊருக்கு யோகம் வருதுன்னு சொல்லுங்க. ஏதோ புண்ணியவானுங்க செய்யுங்க. பாழடைஞ்சு கெடக்கிற ஊரு உருப்படும். நம்மளுக்கும் நல்லா வியாபாரமாகும்....''

''ஆவும். வர்றேங்க...''

''நம்மூருக்கு சினிமாக் கொட்டகை வருதுடோய்....'' என்று சிறுவர்கள் கோரஸாய்க் கத்திக் கொண்டே ஓடினார்கள்.

''யப்பா... இப்பத்தாய்யா நம்ம ஊருக்கு நல்ல காலம் பொறந்திருக்கு. கூட்டம் கூட்டமாச் சனங்க வருவாங்க. ஜே.. ஜேன்னு ஊரு சந்தடியாயிடும். பொழுது போறது தெரியாது. நம்மளும் அலுத்து சலிச்சுப் போனா, உட்கார்ந்திட்டு வரலாம்...''

அவரவருக்கும் தகுந்த மாதிரி சிலாகித்துக் கொண்டார்கள்.

கூதவு சாத்திக் காரின் கண்ணாடியை ஏற்றி விட்டுப் ''பழங்காலத்து வீடுப்பா...'' என்றபடி நுழைந்தார்கள்.

ஒரு நடு வயது வேலைக்காரன் ''வாங்க. யாரப்பாக்கணும்?'' என்று கேட்டு விட்டு. ''இருங்க சொல்றேன்'' என்று போனான்.

விஸ்தாரமான திண்ணையில் நிறைந்திருந்த நாற்காலிகளின் வேலைப்பாடுகளைப் பார்த்துப் பிரமித்தார்கள்.

''வாங்க வாங்க...'' சிவந்த மேனியோடு, போதுமான சரீரத்துடன் வந்த பஞ்சுத் தேவரிடம் அறிமுகப்படுத்திக் கொண்டார்கள்.

''அய்யா... நாங்கள் நண்பர்கள். டவுன்லேர்ந்து வர்றோம்...''

''சந்தோஷம். என்ன விசயமா வந்திருக்கிங்க?''

''உங்ககிட்டே காலி கிரவுண்ட் இருக்கிறதாக் கேள்விப்பட்டோம். அதக் கொடுத்தீங்கன்னா ஒரு டூரிங் கொட்டகை கட்டலாம்னு இருக்கோம்.''

''டேய் காப்பி கொண்டா... நான் விக்கப் போறதா யாரும் சொன்னாங்களா?''

''அய்யய்யோ... அப்படியெல்லாம் யாரும் சொல்லலைங்க. இடம் இருக்கிறது தெரிஞ்சு நேரா உங்களப் பார்த்துக் கேட்டுட்டுப் போகலாம்னுதான் வந்தோம். சினிமாக் கொட்டகை வந்தா ஊரு செழிப்பாயிடும். பஞ்சாயத்துக்கு நல்ல வருமானம் வரும். ஊருக்கு நிறையச் செய்வாங்க. சும்மா தானே கிடக்கு. ஒரு நல்லதுக்குப் பயன்படட்டுமே...''

''மன்னிக்கணும் தம்பி. நான் விக்கிறதா இல்லை.''

''அய்யா... சினிமான்னு யோசிக்கிறீங்களா?''

''சினிமான்னா என்ன கெட்டதா? என்னோட நண்பன் கூட ஒரு புரொடியூசர்தான். சமயத்தில என்னையும் பார்ட்னர்ஷிப்பாப் போட்டுக்குவான்.''

''ரொம்ப நல்லதாப் போச்சு. இதுக்கும் வேணா நீங்க ஒரு 'பார்ட்னர்ஷிப்' எடுத்துக்கங்க.''

''இல்லீங்க. இத வச்சி நான் சம்பாதிக்கிறதா இல்ல. தம்பி சொல்ற மாதிரி அந்த இடம் சும்மா கிடக்கலே. இந்த ஊரு ஜனங்களுக்குப் பயன்பட்டுக்கிட்டு இருக்கு. அது இல்லன்னா ரொம்பக் கஷ்டமாயிடும்.''

''புரியலீங்களே...''

''ஊர்ல கிடந்த மொத்தப் பஞ்சாயத்துப் பொறம்போக்கெல்லாத்திலேயும்வீடு கட்டிட்டாணுங்க. வீடு அவசியம்தான். ஆனா, வீடு மட்டும் போதுமா? கக்கூஸ் வசதி வேண்டாமா? இங்கே ஏராளமான ஜனங்களுக்கு அந்த வசதி இல்லே. அதுக்குத்தான் அந்த

வள்ளுவன்

இடத்தை அப்படியே விட்டுட்டேன். இல்லாட்டி. நானே அத சோலையாக் கூட மாத்திப்புடுவேன். இப்பப் புரியும்னு நினைக்கிறேன்....''

காப்பி வந்தது. வேண்டா வெறுப்பாகக் குடித்தார்கள்.

''தயவு செஞ்சு தம்பி எல்லாம் என்னை மன்னிக்கணும்.''

''இதுல என்னங்க இருக்கு. வேணா இன்னொரு வாட்டி வர்றோம். யோசனை பண்ணிச் சொல்லுங்க....''

''இல்ல தம்பி, யோசன பண்றதுக்கு என்ன இருக்கு? என்னோட காலத்துக்கும் அது இப்படித்தான் கிடக்கும். பிற்பாடு எப்படியோ....''

அவர்கள் எழுந்து கொண்டார்கள்.

''சரிங்க. உங்களைத் தொந்தரவு பண்ணிட்டோம்னு நினைக்கிறோம். வர்றேங்க!''

''அப்படியெல்லாம் ஒண்ணுமில்ல. சந்தோஷமாப் போயிட்டு வாங்க...''

கார் கோபமாகச் சீறிப் புறப்பட்டது.

''ஏண்டா... அந்த ஆளு லூஸ் மாதிரின்னு தெரியுது.''

''அதென்ன எழவோ... அந்த இடத்த வாங்கணும்னா ஒரே வழிதான் இருக்கு.''

''ஊர்ல உள்ளவனுக்கெல்லாம் 'லெட்ரீன்' கட்டித் தரலாம்ங்கறியா?''

''இல்ல. அந்த ஆளு மண்டையப் போடணும்!''

''ரெண்டும் நடக்காது. வண்டிய பார்த்து ஓட்டு, நாம மண்டையப் போட்டுறப் போறோம்!''

டீக்கடை வளைவில் திரும்பிய போது, டீக்கடை ஆசாமி, ''என்ன, முடிச்சிட்டீங்களா?'' என்றான்.

''இல்லீங்க. உங்க ஊருக்கு ராசி இல்ல. நாங்க வேற இடம் பார்க்கிறோம். வரட்டுங்களா...''

''இந்தக் கிழம் கட்டைங்க எல்லாத்தையும் புடிச்சிச் சுட்டுத் தள்ளணும்யா. ஊருக்கு ஒரு நல்லது நடக்கவிட மாட்டாங்க. நமக்கு மிஞ்சினது எதுவும் இருக்கக் கூடாதுன்னு நினைப்பாங்க. ச்சே, நாய்க்குத் தேங்கா கெடச்ச மாதிரி...'' என்று முணுமுணுத்தான் டீக்கடைக்காரன்.



# மணல்வெளி மான்கள்

11

ஆற்று மணலில் அமர்ந்து பேசுவது, நித்யாவுக்குப் பிடிக்கும். சிறுமி போல மணலை அளைந்து குவித்து, ஒரு வீடு கட்டி, அதைக் குலைத்து, பேசிக் கொண்டிருப்பதில் ஒரு சுகம்.

அதனால் அவர்கள் ஆற்றுக்கு நடந்தனர்.

''எவர்சில்வர் தூக்கிலே என்ன?'' கௌதம் கேட்டான்.

''கரும்பாலையிலேர்ந்து தானே வர்றேன்...'' வேறு என்ன இருக்கும் சொல் என்று ஒரு கேள்வித் தொனியோடு நிறுத்தினாள்.

தூக்கின் விளிம்பில் வழிந்திருந்தது கரும்புச்சாறுதான் என்று நிர்ணயித்துக் கொண்டான்.

''குடிக்கிறியா; இரு தூக்கை எடுத்துட்டு வந்துடறேன்.''

''வேண்டாம்.''

''ஒனக்கு ரொம்பப் புடிக்குமே!''

''இப்ப தேவையில்லே.''

''இஞ்சியும் எலுமிச்சையும் சேர்த்தது.''

''வேண்டாண்றேன் இல்லே.''

''ஏன்?''

''மனசு சரியில்லே. குடிக்கனும் போலத் தோணலே.''

அவள் மேற்குப் பார்த்து மணலில் அமர்ந்தாள். அஸ்தமிக்க விரைகின்ற சூரிய வெளிச்சம் செக்கச் செவேலென்று அவள் மீது விழுந்தது. நின்றிருந்த கௌதம் ஆற்றில் அவள் பாதம் வரை தன் நிழல் நீள விழுந்திருப்பதைக் கவனித்தான்.

அவள் முகத்தில் விழுந்த வெயில் உஷ்ணம் மறைகிறவாறு முன்னே நகர்ந்தான்.

நிழல் நீண்டு முகத்துக்குக் காப்பாயிற்று.

நித்யா அந்தக் க்ரிசனத்தைப் புரிந்து கொண்டாள்.

நிற்கின்ற அவனது நிழல் திட்டில் அவள் முகம் கவலை காட்டியது.

''இது கஷ்டம்கிறியா? கலபம்கிறியா?''

''உனக்கு என்ன ஆச்சு கௌதம்?''

''ஆதியை ஜாமீன்ல வெளில விட மாட்டேன்றாரு இன்ஸ்பெக்டர்.''

''அதனால அவன் செய்யாத குற்றம் நிரூபணமாயிடுமா?''

அவள் அறியாமையைக் கண்டு பரிதாபமாக அவன் சிரித்தான்.

''நீதி நியாயம் செத்தா போயிடும்?''

அவள் முகம் சிவந்ததைக் கண்டு கௌதமுக்குப் பரிவு வந்தது.

''கண்ணம்மா... அது எப்பவும் சாகற தில்லே. உயிரோடவேதான் இருந்திட்டிருக்கு.''



அவன் கண்ணம்மா என்று கூப்பிட்ட விதத்தில் அவள் நெஞ்சு குழைந்தது.

''ஆனா பணபலம் அதிகாரம் ரெண்டும் அதை ஊமையாக்கிடும்.''

''இப்போ என்ன நடக்குது சொல்லு?''

''துளசிங்கத்தின் கை ஓங்கியிருக்கு.''

''அப்போ ஆதி?''

''பார்ப்போம்.''

''உட்கார் கௌதம்.''

அவன் உட்கார்ந்தான்.

தூரத்தில் எங்கோ வேட்டு சப்தம் கேட்டது. சவ ஊர்வலத்தில் வெடிக்கும் வாண ஓசை.

''மாசிலா 'பாடி'யை ஆஸ்பத்திரியிலேர்ந்து குடுத்திட்டாங்களாமே'' என்றாள் நித்யா.

''யார் சொன்னது?''

''கரும்பாலைலே பேசிக்கிட்டாங்க! சவ அடக்கத்துக்கு ஆகிற செலவை ஏத்துக்கறேன்னு தொளசிங்கமே சொல்லிட்டா

வையவன்

ராம்!''

மீண்டும் ஒரு வாணம் வெடிக்கும் ஓசை.

கௌதம் வாணம் வந்த திசையைத் திரும்பிப் பார்த்தான். அது மாசிலாவுக்குத்தான். மறு வாணம் வெடித்த போது உற்றுக் கேட்டான்.

இல்லை. அது மாசிலாவுக்காக மட்டும் இல்லை. துளசிங்கம் வெற்றியைக் கொண்டாடிக் கொண்டிருக்கிறான். எனக்கு எவ்வளவு அனுதாபம் பார் என்று வேஷமிட்டுக் கொண்டே, தன் வெற்றியை எச்சரிக்கிற மாதிரி கொண்டாடுகிறான்.

அன்னவாசல் என்ன செய்யும்? வேடிக்கை பார்க்கும். விட்டலாபுரம்? வீதிக்கு வீதி வீட்டுத் திண்ணைகளிலும், தெரு முனைகளிலும் வம்பளக்கும். வேறென்ன?

மாசிலாவின் கதை மெல்ல மறந்து போகும். ஆதி மாதிரி எத்தனையோ பேர். அவன் போனால் இன்னொருவன் கிடைப்பான். இனி வருகிறவன் அதி ஜாக்ரதையாக இருப்பான்.

உச்சி வெயிலிலும் நடுநிசியிலும் குயில் தோப்புக்குப் போனால் ஜடாமுனி அறைந்து விடும் என்று விட்டலாபுரத்தில் ஒரு கிலி உண்டு. அது மாதிரி துளசிங்கம் விவகாரத்தை ஓர் எழுதாச் சட்டம் ஆக்கி விடுவார்கள்.

ஊருக்கு நம்பிக்கை மாதிரியே கிலியும் ஓர் அத்தியாவசியம். நம்பிக்கைக்கும் கிலிக்கும், கிலிக்கும் நம்பிக்கைக்குமாக தொட்டுத் தொட்டு ஓடித் திரும்பும் பந்தயம் அவர்களுக்குத் தேவை.

' அரை வாழ்வு அரை மரணம் என்ற சரிவிகிதக் கலவையில்தான் ஊரின் காலம் ஓடுகிறது.

''என்ன பேசாம உட்கார்ந்திருக்கே?'' என்றாள் நித்யா.

இரண்டு நடுவிரல்களைப் பெருவிரல் மேல் வைத்து மடித்து, சுட்டு விரலையும் கடை விரலையும் கொம்பாக நீட்டி ஆற்று





ஏட்டு: "சார்... எங்க ஸ்டேஷன்லரிமாண்டுல இருந்த ஒரு குற்றவாளியைக் காணோம். டி. ஐ. ஜி. இன்ஸ்பெக்ஷன் வர்றார். அதான் ஐயா உங்க ஸ்டேஷன்ல இருந்து குற்றவாளி ஒருத்தனை கைமாற்றா வாங்கிட்டு வரச் சொன்னார்!"

— கடுவை. கோபால்சாமி.

மணலில் மானின் நிழற் சித்திரம் விழப் பண்ணிக் கொண்டிருந்தாள்.

"யோசிக்கிறேன்."

நித்யா மான் புல் தின்னுவதைப் போல விரல்களை அசைத்தாள்.

"ரொம்ப யோசிக்காதே கௌதம்!"

"எந்த அர்த்தத்திலே சொல்றே?"

"மிதமிஞ்சிய யோசனை ஒரு காரியமும் செய்ய விடாது!"

"மிதமிஞ்சினாத்தானே?"

"என்னை எதிரிலே ஒக்கார வச்சுட்டு நீ பாட்டுக்கு யோசனை பண்றது என்ன ரகம்?"

"ஸாரி நித்யா."

நித்யா அவனைக் கண் வாங்காமல் சிறிது நேரம் பார்த்தாள்.

"கௌதம்."

"ம்ம்."

"நீ எதுவோ ஒரு முடிவுக்கு வந்திருக்கே! இல்லே வரப் பார்க்கிறே."

"கரெக்ட்."

"எங்கிட்டே சொல்லக் கூடாததா?"

"இல்லே."

"பின்னே?"

அவன் அவளையே பார்த்தான்.

"கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி நீ என்கிட்டே எதுவோ ஒரு மரியாதை வருதுன்னு சொன்னியே... ஏன்?"

அவள் நிழற்சித்திரத்தை விட்டு விட்டு முந்தானைத் தலைப்பை சுருட்டத் தொடங்கினாள். கண் நிமிராமல் பதில் சொன்னாள்.

"தெரியலே. ஒருவேளை நீ இப்படி யோசிக்கறது கூடக் காரணமா இருக்கலாம்."

"அது வித்தியாசமா இருக்கா?"

"சில சமயம்."

"பல சமயம்?"

"மண்ணாங்கட்டி! சும்மா நோண்டக் கூடாது" எரிச்சலாகச் சொன்னாள்.

அவன் சிரித்து விட்டான்.

"வெறுப்பு ஏத்தத்தானே கேட்டே?" என்று கோபமாக வெடித்தாள்.

"இல்லே நித்யா! ஒரு பெண்ணின் வார்த்தையிலேதான் ஒரு ஆண் தன் பிம்பம் பார்க்கிறான்."

"நீ அந்த ரகம் இல்லே."

"நான் எந்த ரகமோ எனக்குத் தெரியாது. இப்போ ஆதி உள்ளே மாட்டிக்கிட்டிருக்கான். அவனுக்காகவோ அவனுடைய ஊமை அம்மாவுக்காகவோ ஊர்ல ஒரு வெரல் கூட அசையப் போறதில்லே. இதை அப்படியே விட்டுட்டுக் கையையும் வாயையும் பொத்திக்கிட்டு நானும் சும்மா இருந்தா நீ சொன்னியே அந்த மரியாதை எனக்கே என் மேல வராது!"

நித்யா முந்தானை சுருட்டுவதை நிறுத்தினாள். நிமிர்ந்தாள். முகத்தில் ஒரு கலவரம்.

"என்ன செய்யப் போறே?"

"பொறுத்திருந்து பாரேன்."

நித்யாவின் பார்வை அவன் மீது நிலைத்தது. கலவரம் அதிகரித்தது.

அவள் நகர்ந்து அவனருகில் நெருக்கமாக உட்கார்ந்தாள். முழங்காலை மடித்துக் கட்டியிருந்த அவன் கைகள் மேல் கை வைத்தாள்.

"கௌதம்!"

அவன் ஒரு கையை விலக்கி அவள் கை மேல் வைத்தான்.

"நீ பயப்படறே இல்லே" என்றான்.

"துளசிங்கம் ரொம்பப் பொல்லாத ஆள்."

"ச்" என்று செல்லமாகக் கடிந்து கொண்டே அவள் கையைத் தட்டிக் கொடுத்தான் கௌதம்.

"இருக்கட்டும்! அது நீடிக்கக் கூடாது இல்லியா?"

அவள் பதில் சொல்லவில்லை.

"நீ பயப்படற மாதிரி நான் துளசிங்கத்தோட மோதப் போறதில்லே."

"பின்னே?"

"பொறுத்துக்கச் சொன்னேனே."

"இந்த சஸ்பென்ஸ் எல்லாம் வேண்டாம்பா. எனக்கு நீ முக்கியம்."

இங்கிருந்துதான் பயம் தொடங்குகிறது என்று நினைத்தான் கௌதம். பெண் ஆணை இறுகப் பிடித்து இழுத்து நிறுத்திக் கொள்ளும் பயம்.

அவன் வந்த எண்ணத்தை மாற்றிச் சிந்தித்தான்.

ஆண், பெண்ணை விட்டுவிடக் கூடாது என்ற உடைமை உணர்வின் கோழைத்தனத்தில் பிறந்த பயம். நியாயம், நீதி என்று எதையும் கண்டுகொள்ளாமல் கூட்டம் கூட்டமாகத் திரள் திரளாக வழிநடந்து செல்லும் காலங்காலமான மந்தை உணர்வின் பயம்.

"நான் மட்டும்தான் முக்கியமா?"



**அமைச்சர்: "எனக்கு எல்லோரும் சோப் புப் போடுகிறார்கள் என்று புகார் கூறு பவர்களுக்கு ஒன்று சொல்லிக் கொள் கிறேன். தூய்மையான நிர்வாகத்தைக் கொடுக்கத்தான் சோப்புப் போடுகிறார் கள் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்!**

— கடுவை. கோபால்சாமி.

● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ●

"வேறே?"

நித்யா நிமிர்ந்து பார்த்து உணர்ச்சியை அடக்க உதட்டைக் கடித்துக் கொண்டாள்.

"ஒழுங்காக, நல்ல பிள்ளையா கைநிறை யச் சம்பாதிச்சுக்கிட்டு வந்து குடுத்துட்டு, எந்த வம்பு விவகாரத்துக்கும் போகாம நாம உண்டு, நம்ம வேலை உண்டுன்னு ஒதுங்கி, புள்ளை குட்டி பெத்துக்கிட்டு..."

அவன் இளக்காரமாக வளர்த்துக் கொண்டு போகிறான் என்று புரிந்து நித்யா குறுக்கிட்டாள்.

"சும்மா போரடிக்காதே.தப்பித்து உயிர் வாழறது. இதுதான் நாம படிச்ச டார்வின்."

"ஆக, நீயும் சராசரிப் பெண்தானா?"

"எப்படி வேணும்னாலும் வச்சுக்கோ."

"இதோ பார்... என்னைப் பார்த்துப் பேசு."

அவள் பார்க்கவில்லை.

"நம்மைச் சுத்தி அநியாயம் நடந்துக் கிட்டே போகட்டும்! அக்கிரமம் கொடி கட்டிப் பறக்கட்டும். நாம தப்பிச்சு உயிர் வாழ்ந்தால் போதும். உனக்காக நான். எனக்காக நீ. இவ்வளவு போதுமா? இது மட்டும் போதுமா?"

அவன் குரல் உயர்ந்திருந்தது.

"உஸ்ஸு... இதென்ன மீட்டிங்கிலே பேச றாப்பிலே... வேறே என்ன பண்ணிட முடி யும்னு நெனைக்கிறே?"

"டார்வின் சொன்னது மிருகங்களுக்கு. ஜீவராசிகளுக்கு. மனுஷனுக்கு இல்லே. மனுஷன் நிரூபிச்சுக் காட்டணும்."

"என்னத்தை?"

"அவன் மனுஷன்தாங்கிறதை!"

"யாருக்கு நிரூபிக்கணும்?"

"ஒனக்கு. இல்லே, தனக்கே."

தான் வாழும் காலத்துக்கு என்று மனத் திற்குள் சொல்லிக் கொண்டான். அது அவ ளுக்கு ஒரு மேடை வார்த்தையாகத் தோன் றும். சொல்லிப் பலனில்லை.

"இந்த நிரூபணத்திலே என்ன மிஞ்சி டும்? வெறும் வீராப்பைத் தவிர?"

"தப்பிச்சுத் தப்பிச்சு வாழவே முடியாது. அது செத்துச் செத்துப் பிழைக்கிற மாதிரி. நாளைக்கு வேற ஒரு வலையிலே என்னை யும் ஒன்னையும் வளைக்கலாம்! ரெண்டு பேரும் ஆளுக்கு ஒரு திசையிலே பிரிஞ்சு தப்பிச்சுடலாம்கறியா?"

"இந்தப் பேச்சை விட்டுடுவோம் கௌதம்."

அவள் கன்னம் துடிப்பதை, கண்கள் கலங்குவதைக் கௌதம் பார்த்தான். மௌன மானான். அவள் தன்னைச் சமாளிக்க நேரம் கொடுத்தான்.

மாலைச் சூரியன் பிரம்மாண்டமான கால் பந்தாக ஒரு கோல் போஸ்டில் உதைத்துத் தள்ளலாம் போல மேற்கில் வீரியம் குன்றி நின்றது.

பறவைகள் வீடு திரும்பிக் கொண் டிருந்தன. ஒரு கூட்டத்தின் இறக்கை ஓசை தலைக்கு மேலே துல்லியமாகக் கேட்டது.

"என்ன நித்யா திடீர்னு?"

"ச்சீ போப்பா! நீ என்னென்னமோ பேசறே."

கடைசியாகச் சொன்னது தாக்கி விட்டி ருக்கிறது. அவனுக்கு நெஞ்சு விம்மியது. ஒரு பூரிப்பான விம்மல். பிரிவு என்று சொன்ன மாத்திரத்தில் துடிக்கிற சொந்தம் கண்டு வந்த விம்மல்.

அதை மீறி ஒரு நிதானம் வந்தது. தெளிந்த அமைதியில் உதித்த உறுதியான நிதானம்.

இந்தச் சொந்தத்தில், உதடும், கண்ணும், இடுப்பும், புஜமுமாய் எங்கு வேண்டுமாயி னும் ஆளவும் ஆட்படவுமாய்ப் பரவியுள்ள சௌந்தரியத்தின் சொந்தத்தில் என்றென் றும் எல்லாம் புறக்கணித்துச் சிறைப்பட முடியுமா?

அவனுக்கு லாக்கப் கம்பியைப் பிடித்து நின்ற ஆதியின் முகம் நினைவுக்கு வந்தது. அடுத்து அவன் தாய் மங்கலட்சுமியின் ஊமைப் பரிதவிப்பு.

"நேரமாச்சு நித்யா."

"ஆமா... ஒரு வேளை அப்பா வந்திருந் தாலும் வந்திருப்பார்," அவளும் எழுந்து மணலை உதறினாள்.

"நீ மொதல்லே சைக்கிள்லே போ! அப் புறமா நான் போறேன்."

"இருட்டிக்கிட்டு வருதே!"

"பரவாயில்லே... வெளிச்சம் இருக்கு! நான் போய்க்குவேன்."

அவன் சைக்கிள் பூட்டைத் திறந்து ஸ்டாண்டைத் தள்ளிய போது, நித்யா நினை வூட்டினாள், "ஞாபகமிருக்கட்டும்; நீ எனக்கு முக்கியம்" என்று.

(தொடரும்)



* ராஜினாமா சரியா?



* ஊடல்!



* தாவல் சாதனை!

## நீங்கள் கேட்டவை

— தராசு



* வசந்த கீதம்



* கிளுகிளு அரசியல்

பதவியை ராஜினாமா செய்திருப்பது சரியா?

! சரிதான். இல்லையென்றால் ஜனதாதள வளர்ச்சியில் போதிய கவனம் செலுத்த முடியாமல் அதுவும் ஒரு காங்கிரஸ் ஆகி விடும் ஆபத்து இருக்கிறது. ஒருவர் ஒரு பதவியோடு நிறுத்திக் கொள்வது நல்லது என்ற அடிப்படைக் கருத்தும் வரவேற்கப் பட வேண்டியதே. ஆனால் ஒன்று. பதவியை ராஜினாமா செய்தால் மட்டும் போதாது. அந்தப் பதவியை வகிக்கத் திறமையான ஒத்துழைப்புத் தரக்கூடிய இன்னொரு நபரைத் தேடிப் பிடிக்கிற பொறுப்பும் வி. பி. சிங்குக்கு உண்டு. அதைத் தொடர்ந்து உட்கட்சி ஜனநாயகம் பலம்பெற ஏற்பாடுகள் நடக்க வேண்டும்.



# ஆற்காடு வீராசாமி

* கழன்று கொண்டார்!

* வி. ராதாகிருஷ்ணன், சென்னை — 91.

? தியேட்டரில் பின் சீட்டில் அமர்ந்து கொண்டு நம் காது கேட்க நண்பனிடம் அடுத்து வரப் போகும் காட்சியை முன் கூட்டியே கூறி கழுத்தறுப்பவர்களைச் சந்தித்த அனுபவம் உண்டா?

!. ஐயோ! அந்தக் கூட ஒரு மாதிரி சமாளிச்சுக்கிட்டுப் போயிடலாம் ஸாரே! ஆனா ஒரு பிரபல பாடகர் பிரமாதமா கச்சேரி பண்ணிக்கிட்டிருக்கிறப்ப, ஏதோ தனக்கு அவரைவிடத் தெரியும் போலக் கூடவே பாடிக்கிட்டு வருகிற கிராதக ரசிகனைக் கழுத்தை நெறிச்சுக் கொன்னுடலாம் போல ஆவேசம் வருது. பாட்டு கேட்டா டென்ஷன் குறையும்பாங்க, ஜாஸ்தி ஆயிடறது!

* எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? அ. தி. மு. க. விலிருந்து விலகி, ஜனதா தளத்தில் சேர்ந்து வலம்புரிஜான் சாதனை படைத்திருக்கிறாரே?

! ஏதோ கட்சித் தாவலிலாவது சாதனை படைக்கிறார்களே, என்று இவரைப் போன்றவர்களைப் பார்த்து சந்தோஷப்பட்டு விட்டுப் போக வேண்டியதுதான்!

* ஆற்காடு எழிலன், திருச்சி. *

? பிரதமர் வி. பி. சிங் கட்சித் தலைவர் பதவியை ராஜினாமா செய்திருப்பது சரியா?

* கே. மகேஷ், சங்கராபுரம்.

? 'சௌடாலா முதல்வர் பதவியை ராஜினாமா செய்ய வேண்டும்' என்று அத்வானி கூறுகிறாரே?

! நடந்திருக்கிற அக்கிரமத்துக்கு அவர் எட்டு தடவை ராஜினாமா செய்தாலும் போதாது! ஆனால் நாடே ராஜினாமா கோரிக்கை எழுப்பியும் ராஜினாமா செய்யாதவரை என்ன பண்ணுவது? மக்கள் தான் நடக்கப் போகும் மறுதேர்தலில் தண்டித்துவிட வேண்டும்.

* தமிழ்ப்பரிதி, நல்லிக்குப்பம்.

? ஆற்காடு வீராசாமி ராஜினாமா செய்தாரா, செய்யப்பட்டாரா?

! ஒரு தடவை ராஜினாமா செய்து, பின்னர் அது வாபஸ் பெறப்பட்டு, மீண்டும் ராஜினாமா செய்திருப்பதைப் பார்த்தால், 'ராஜினாமா செய்தார்' என்ற ஊகத்துக்குத்தான் அதிக இடமிருக்கிறது. எப்படியோ கழன்று கொண்டது புத்திசாலித்தனம்! ஏனென்றால் இன்று தி. மு. க. ஆட்சி அப்படி நினைக்க வேண்டிய நிலைக்குத்தான் சென்று கொண்டிருக்கிறது!

* எஸ். யோகலிங்கம், சென்னை.

? நடிகைகளில் யார் கன்னம் ஆப்பிள்? யாருடையது மாம்பழம்?

! ஏன், என் ஒரு கன்னம் ஆப்பிளாகவும் இன்னொன்று மாம்பழமாகவும் வீங்குவதைக் காண ஆசையாக இருக்கிறதா?

* ஏ. ஜஹ்பர் காதர், சென்னை.

? 'தேர்தலில் தோற்றதும் ஒரு த்ரில்லான அனுபவம்' என்கிறாரே உஷா ராஜேந்தர்?

! ஆண் பிள்ளையாக இருந்தால், 'மீசையில் மண் ஒட்டலையே' எனலாம்; பெண் மணியானதால் இப்படித்தான் கூற வேண்டும்.

* என். கந்தசாமி, மதுரை.

? ''ஒரு காலத்தில் திராவிடச் சிங்கங்களாக இருந்தவர்கள் இன்று நடிகையின் எடுபிடிகளாகி, ஒநாய்களாக அவருக்குப் பின் ஓடிக் கொண்டிருக்கிறார்கள்'' என்று வீரமணி கிண்டல் செய்திருக்கிறாரே?

! என்ன செய்ய, வீரமணியின் கருத்தை ஏற்றுக் கொள்ள வேண்டிய தருணங்களும் நமக்கு ஏற்படத்தான் செய்கின்றன!

* வண்ணை கணேசன், சென்னை — 11.

? கவியோகி சுத்தானந்த பாரதி மறைவு குறித்து...?

! கவிதையிலும் உரைநடையிலும் பசுந் தமிழ்ச் சோலையில் வசந்தகீதம் இசைத்தவர். படிக்கத் தெவிட்டாத இவரது பழைய நூல் ஒன்று: ''பெரியார் வரலாறு.'' எங்காவது கிடைத்தால் படித்துப் பாருங்கள்!

* ஏ. கிரி, மேலக்காவேரி.

? ''இந்த டீம் பஸிபிக் சமுத்திரத்தில் தள்ளப்பட வேண்டியதாகும்'' என்று பேடி கூறியுள்ளாரே?

! ''செலக்டர்கள், மானேஜர் உள்பட அனைவரையும் தள்ளி விடலாம்'' என்கிறார் ஓர் ஆவேச கிரிக்கெட் விசிறி!

* ஆர். சலாம், திருச்சி.

? திலிப்குமார் படுகொலை பற்றி?

! போஸ்டரில் பெயர் போடாததற்குக் கொலை, போர்டில் பெயர் மாற்றத்துக்குப் போராட்டம்... இ. காங்கிரஸ் கொள்கை அளவில்போராட இன்னும் கற்றுக்கொள்ள வில்லையே!

# ராஜினாமா பற்றி?



* கே. ரமேஷ் ராம், செங்குன்றம்.

? காஷ்மீரில் நடந்த அனைத்துக் கட்சிக் கூட்டத்தில் ராஜீவ் கலந்து கொண்டது பற்றி?

! கலந்து கொண்டால் தேவலாமே! கலகல வென்று ஒசை எழுப்பியதோடு சரி! 'தேவிலால் அமர்வது கவர்னருக்கு வலப்புறமா, இடப்புறமா? அவரை விமான நிலையம் சென்று கவர்னர் வரவேற்றிருக்க வேண்டுமா?' இதெல்லாமா காஷ்மீர் பற்றி எரியும் போது முக்கிய பிரச்னைகள்? ஒரு வேளை பிரச்னையை இவ்வளவு தூரம் வளரவிட்டதே தாம்தான் என்பதை மூடி மறைக்க, இப்படிக் கிளு கிளு அரசியல் நடத்துகிறாரோ என்னமோ? தலைவரிடம் மெச்சூரிடி இல்லாத போது சிதம்பரம், வாழப்பாடியிடம் அதை நாம் எப்படி எதிர்பார்க்க முடியும்?

* மஞ்சுதேவன், கல்கத்தா.

? டெம்பிள்டன் அவார்டு வாங்கிய பாபா அம்தேயின் சேவை பற்றி?

! மோசமான தமது உடல்நிலையையும் பொருட்படுத்தாமல் ஆனந்த வனத்தில் அவர் தொழு நோயாளிகளுக்கு ஆற்றும் சேவை, தெய்விகமானது.

* பாக்யமுத்து, திருச்சி.

? ஹைதராபாத்தில் புத்தர் சிலை மூழ்கி விட்டதே?

! ''என். டி. ஆருக்குப் பேரும் புகழும் அதனால் வந்துவிடப் போகிறதே என்பதற்காகச் சென்னாரெட்டி செய்த சதி'' என்று ஆந்திராவில் யாரும் கூறாதது வியப்பளிக்கிறது! என்ன இருந்தாலும் தமிழனுக்கு உள்ள கற்பனைத் திறன் அவங்களுக்கெல்லாம் கிடையாதுதான்!

* ரூ. 20 பரிசு பெறுபவர்:

ஆற்காடு எழிலன்,
ஸ்டேட் பாங்க் ஆஃப் திருவாங்கூர்.
திருச்சி — 2.

(சென்ற இதழின் தொடர்ச்சி)

**கலந்துரையாடல்**

இந்துமதி — புஷ்பா தங்கதுரை

# "எனக்கே இப்போதான் தெரிஞ்சுது..."

**பு:** நான் முதலிலேயே ஸ்ரீராம் சிட்பண்ட்ஸ்லே 4, 5 சீட்டு எடுத்திருந்தேன். அப்ப எனக்கு வீடு கட்டும் போது ஒரு பெரிய பிரச்சனை வந்தது. கூரை கட்றதுக்கு மொத்தம் ரூ.20,000/- தேவை இருந்தது. நான் கோவாப்பரேடிவ் சொசைட்டியிலே கடன் எடுக்க போனபோது அவங்க முழு பணம் கொடுக்க மறுத்துட்டாங்க. ரூ.2,000/-, ரூ.3,000/- அப்பமன்னு கொடுக்கறேன்னுங்க. அந்த நிலையிலே நான் என்ன பண்றதுன்னு தெரியாம கஷ்டப்பட்டபோது என்னுடைய நெருங்கிய நண்பர் ஒருவர் ஸ்ரீராம் சிட்பண்டை பத்தி சொல்லி என்னைச் சேரச் சொன்னார். நானும் சேர்ந்தேன். சேர்ந்து 4-5 மாசத்துலே சீட்டு எடுத்ததுலே பெரிய தொகை கிடைச்சது. அதைவச்சுதான் உண்மையாகவே கூரை கட்டினேன். அன்னிக்கிலேர்ந்து நான் ஸ்ரீராம் சிட்பண்டிலே தவறும சீட்டுக் கட்டிண்டிருக்கேன்.

**இ:** நீங்க சீட்டுலே சேர்ந்து 4-5 மாசத்துலே எடுத்துட்டிங்க அப்பமன்னு நீங்க நிறைய வட்டி கட்ட வேண்டியதா இருந்திருக்குமே? நீங்க எப்படி சமாளிச்சீங்க?

**பு:** அதுதான் கிடையாது. நீங்க நினைக்கறா மாதிரி நான் நிறைய வட்டி கட்டலே. இப்ப நான் ரூ.20,000/- வெளியிலே கடன் வாங்கியிருந்தேன்னு ஏகவட்டி கொடுக்க வேண்டியதாக இருந்திருக்கும். நான் ஸ்ரீராம் சிட்பண்டு மூலமா வாங்கியதை கணக்கு பண்ணிப் பார்த்தா வட்டி விகிதம் 1-1½% வட்டிதான் இருக்கும். மேலும் நான் கடன் வாங்கியதாக எண்ணம், ஒரு தயக்கம், இல்லே. இப்படித்தான் நமக்கு தெரியாமலேயே நமக்குள் இருக்கும் ஒரு சிறப்புச் சக்தியை சிட்பண்டு வெளிக்கொணர்கிறது.

**இ:** இப்ப எனக்கு கிடைக்கிற கொஞ்ச பணத்தை நான் பாங்கிலே போடாம சிட்பண்ட்ல போடறேன்னு வைச்சுக்குங்க, எனக்கு என்ன ஆதாயம்?

**பு:** நீங்க சொன்ன மாதிரி பாங்கிலே டெபாசிட் பண்ணீங்கன்னு அதுக்கு கிடைக்க கூடிய வட்டி 10% அல்லது 12% கொடுக்கறுங்கன்னு சிட்பண்டு மூலமா 16-18% வரை செல்லும். அதுவும் நமக்கு டிவிடெண்டு மூலமாக முன்பே கிடைக்கும்.



## "நான் ஒரு 10 பேரிடமாவது சொல்லுவேன்..."

**இ:** இப்ப நான் சீட்டுலே சேர்ந்து பணம் எடுக்கறேன்னு வைச்சுங்குங்க, பணத்தை எப்படி உடனே குடுத்துடுவாங்களா? அதை வாங்கறது ஒண்ணும் கஷ்டம் இருக்காதே?

**பு:** நீங்க சீட்டு எடுத்தப்புறம் உங்ககிட்ட சில ஃபார்ம்ஸ் குடுப்பாங்க. அதை பூர்த்தி செஞ்சு, இரண்டு பேரிடம் உங்க பணத்துக்கு கியாரண்டியாக கையெழுத்து வாங்கி வந்து குடுத்தப்புறம் உங்களுக்கு சரியா 30வது நாள் செக் குடுத்துடுவாங்க. இந்த நடைமுறையில் செயல்படும் கம்பெனியைத் தான் அரசாங்க விதிகளுக்குட்பட்டு இயங்கும் கம்பெனி என்று சொல்லமுடியும்.

**இ:** நான் சீட்டுலே சேர்ந்து பணமே எடுக்கலேன்னு வைச்சுப்போம், அதுல ஏதாவது ஆதாயம் இருக்கா?

**பு:** இப்ப உங்களுக்கு பணமே தேவை இல்லேன்னு சொன்னீங்க. நீங்க மாசா, மாசம் அதுல பணம் கட்டிண்டு வந்தீங்கன்னு அதுவே உங்களுக்கு பணம் தேவைப்படும் போது உதவியாயிருக்கும். அதைத் தவிர, உங்களுக்கு பணம் தேவையில்லேயென்றாலும், நீங்கள் சீட்டை ஏலத்தில் எடுத்து, அந்த பணத்தை டெபாசிட் செய்தீர் களானால் உங்களுக்கு கூடுதலான வட்டி கிடைக்கும். அந்த வட்டியை கொண்டு நீங்கள் உங்களது மாதாந்திர தவணையை செலுத்தலாம். இன்னும் சொல்லப்போனா பணத்தை முடக்காமல் மேன்மேலும் சேமிப்பு பெருக உகந்தது சிட்பண்டே.

**இ:** நீங்க சொல்றதை பார்த்தா ஒரு பெண்ணுக்கு கல்யாணம் பண்ணப் போகிற அப்பாவிற்கு 1 லட்சம், 2 லட்சம் தேவையாயிருக்கும். அப்படிப்பட்டவர்களுக்கு எல்லாம் சிட்பண்ட்ஸ் ரொம்ப உதவியா யிருக்கும் போலிருக்கே. அப்புறம் வீடு கட்டுபவர்களுக்கு, பிசினஸ் பண்றவங்களுக்கு, குழந்தைகளின் உயர் படிப்பிற்கு, இந்த மாதிரி திட்டமிட்டு சேமிப்பவர்களுக்கு சிட்பண்டு ரொம்ப உபயோகமாக இருக்கும்.

**பு:** திட்டமிட்டபடி எப்படி சிட்பண்டுலே சேமிக்கலாம்னு இன்னொரு உதாரணம் சொல்றேன். எனக்கு மாச சம்பளம் ரூ.2,500/-ன்னு வச்சுக்குங்க. இதுல என்னால ஒரு 10%, அதாவது ரூ.250/- சேமிக்க முடியும். நான் இந்த ரூ.250/- வச்சுண்டு ஒரு ரூ.10,000/- சீட்டு சேர்றேன். இதுல ஒரு ஆதாயம் என்னன்னு முதல் 10 அல்லது 12 மாதத்துக்கு ரூ.250/- கட்டப் போறதில்லே. ரூ.150/-, ரூ.175/- இப்படித்தான் கட்ட வேண்டிவரும். அடுத்த வருஷம் எனக்கு சம்பள உயர்வு கிடைக்கும். எனக்கு மேலும் ரூ.250/- சேமிக்க முடியும்னு நான் இன்னொரு சீட்டுலே சேர்ந்துடுவேன். 4, 5 வருஷத்துக்கு அப்புறம் மாசம் ரூ.500/- கட்ட வேண்டியதா இருந்தா தைரியமா இந்த சீட்டுலே சேரலாம். வேறு எந்த முறையிலும் இந்த மாதிரி ஆதாயம் கிடையாது. இந்த மாதிரி ஒவ்வொருவரின் சேமிக்கும் சக்தியை பொறுத்து மாதம் ரூ.250/- இருந்து, ரூ.2,000/- வரை வெவ்வேறு சீட்டுகள் இருக்கிறது. நம்மள அறியாமலே நாம் சேமிக்க ஆரம்பிச்சுடுவோம். அதுதான் இந்த சிட்பண்டுலே சிறப்பம்சம்.

**இ:** மக்கள் மத்தியிலே இந்த சீட்டு கட்டறமுறை நல்லா தெரிஞ்சு ருக்குன்னு நினைக்கிறேன். உதாரணமா பாத்திரச் சீட்டு கட்டுறாங்க, நகை சீட்டு கட்டுறாங்க. ஒரு நடுத்தர வர்க்க குடும்பத்திலே கூட இப்படி சீட்டு கட்டறாங்க. ஆனா இந்த மாதிரி பாத்திரச்சீட்டு கட்டறதுக்கும், இவ்வளவு பெரிய சிட்பண்டுலே பணம் கட்டறதுக்கும் என்ன வித்தியாசம்?

**பு:** இப்பாத்திர சீட்டுலே 10, 12 மாசம் கட்டினப்புறம் தான் வட்டி போட்டு பாத்திரம் எடுத்துண்டு போன்னு சொல்றாங்க. நடுவிலே தேவையாயிருக்கும் போது பணம்

எடுக்க முடியாது. ஆனா இந்த மாதிரி ஸ்ரீராம் சிட்பண்டுலே பணம் கட்டினீங்கன்னா ஒரு அவசரத் தேவைன்னா பணம் எடுத்துக்கலாம். முன்னாடி சொன்ன மாதிரி மக்களால் மக்கள் நலனுக்கு பயன்படும் இயக்கம் இந்த ஸ்ரீராம் சிட்பண்டுதான்.

**இ:** இவ்வளவு நேரம் சிட்பண்டை பத்தியும், ஸ்ரீராம் சிட்பண்டை பத்தியும் சொன்னீங்க. இவ்வளவு சிறப்பம்சங்கள் இருந்தும் பெருமளவு மக்கள் ஏன் இதிலே சேரலே?

**பு:** ஸ்ரீராம் சிட்பண்டின் முக்கிய குறிக்கோள் என்னன்னா மக்களுக்கு சிட்பண்டு மூலமா சேமிக்கிற அவசியத்தை உணர்த்தனும். யாரையும் வற்புறுத்தக்கூடாது. இந்த சிறப்பு செயல்முறையின் பலன் தான், இன்றைக்கு 1,60,000 சந்தாதாரர்கள், ஸ்ரீராம் சிட்பண்ட்ஸ் ஒரு மகத்தான மக்கள் இயக்கமாக வளர்ந்து கொண்டு, மேலும் வருடாவருடம் சுமார் 60,000 புதிய சந்தாதாரர்கள் சேர்ந்து, இவ்வியக்கத்தை வலுவடைய செய்கிறார்கள். இப்பத்தான் சேமிப்பின் அவசியத்தை மக்கள் உணர ஆரம்பிச்சிருக்கிறார்கள்.

**இ:** இவ்வளவு நேரம் உங்ககிட்டே பேசினது ரொம்ப உபயோகமா இருந்தது. எப்படி வீடு கட்ட பணம் வாங்கினீங்க. எப்படி திருப்பி கட்டினீங்க எல்லாம் ஆச்சரிய மாகவும், சுவாரஸ்யமாகவும் இருந்தது. இங்க கேட்டது நான் ஒரு 10 பேரிடமாவது சொல்லுவேன். அது அப்படியே மக்கள் மத்தியிலே பரவிகிட்டே இருக்கும். என்ன சொல்றீங்க?

**பு:** கரெக்ட். மக்கள்தான் இந்த ஸ்ரீராம் சிட்பண்டை நாட்டிலேயே நம்பர் 1 சிட்பண்டாக உயர்த்தியிருக்கிறார்கள். ஜனநாயக முறைப்படி நடக்கும் ஒரே சேமிப்பு வகை இந்த சிட்பண்டுதான்.

**இ:** இவ்வளவும் கேட்டதப்புறம் நானும் சிட்பண்டுலே சேரணும்னு முடிவு எடுத்திருக்கேன். சிட்பண்டைப் பற்றி எனக்கிருந்த சந்தேகங்கள் நிவர்த்தியாயிடுச்சு. ரொம்ப நன்றி!

**பு:** நீங்கள் அவசியம் சேர வேண்டும். தமிழ்ப்புத்தாண்டுதான் நெருங்கு கிறதே. நீங்கள் அன்று சீட்டில் சேர்ந்து ஒரு வெகுமதியும் பெறுங்களேன். உங்களுடன் பேசின பிறகு இதைப்பற்றி எனக்கு மேன்மேலும் சிந்திக்க தூண்டுகிறது. மிக்க நன்றி!

கீழே உள்ள ஏதாவது ஒரு தலைப்பில் ஒரு பக்கத்திற்கு மேற்படாமல் கட்டுரை எழுதவும்.

1. 'வரவை வைத்து செலவழிப்பது சரியா?'

   அல்லது

2. 'செலவுக்கு ஏற்ற வரவை பெருக்குவது சரியா?'

இக்கட்டுரை வந்து சேர வேண்டிய கடைசி தேதி : 29.3.90.

**வெல்லுங்கள் பரிசுகளை!**

முதல் பரிசு : 2 × ரூ.500/-
இரண்டாவது பரிசு : 4 × ரூ.250/-
மூன்றாவது பரிசு : 5 × ரூ.100/-

உறையின் மீது 'கட்டுரைப்போட்டி' எனக்குறித்து அனுப்ப வேண்டிய முகவரி :




**ஸ்ரீராம் சிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ் பி.லிமிடெட்.**
நிர்வாக அலுவலகம் :
1, கிளப் ஹவுஸ் சாலை,
சென்னை - 600 002.

**ராஜாஜி வாழ்க்கை வரலாறு — VIII**

**ராஜ்மோகன் காந்தி**

7



# காமராஜருடன் கைகோர்த்தபடி...

"ஒன்றுபடுங்கள்; ஒன்றுபடுங்கள்; எதிர்க்கட்சிகளே, ஒன்றுபடுங்கள்!"

ஆறு ஆண்டுகளுக்குப் பிறகு ராஜாஜியை விட வயதில் குறைந்த, ஆனால் ராஜாஜியை விட பலவீனமான உடலமைப்புக் கொண்ட ஒருவர், இதே வார்த்தைகளைப் பிரயோகித்துத் தமது லட்சியத்தில் வெற்றி காண இருந்தார்.

ஆனால் இப்போது — 1971 — இல் — ராஜாஜியால் எதிர்க்கப்பட்ட இந்திரா, "ஏழைமையை ஒழிப்போம்" என்ற கோஷத்தை மட்டும்தான் எழுப்பியிருந்தார்; எமர்ஜென்ஸி கொண்டு வந்ததை நியாயப்படுத்த வேண்டிய நிலைக்கு இந்திரா தள்ளப்பட்டது 1977 — இல்தான். அப்போது ஜே. பி. அவரை எதிர்த்து மாபெரும் வெற்றி கண்டார்.

இப்போதோ, போராட்டத்தை மேலும் கடினமாக்கும் விதமாக இந்திரா, காங்கிரஸ் கட்சிக்குப் 'பசுவும் கன்றும்' சின்னத்தைப் பெற்றிருந்தார். இது ஹிந்து வாக்காளர்களை விசேஷமாகக் கவரக்கூடியது; புனிதத் தன்மை கொண்டது என்பதால் ஸி. ஆர். பலமாக ஆட்சேபித்தார். சின்னம் காரணமாகவே இந்திராவுக்கு அநீதியான ஒரு கூடுதல் வசதி கிடைத்திருப்பதாகவும், தேர்தலில் சமவாய்ப்புத் தத்துவம் அடிபட்டுப் போனதாகவும் வாதாடினார். ஆனால் பயனில்லை.

வாஜ்பேயி, நிஜலிங்கப்பா ஆகியோருடன் டில்லியில் பேச்சு வார்த்தைகள் நடத்திக் கொண்டிருந்தார் மஸானி. "இந்திராவை முறியடிப்பது பற்றி ஒரு பொதுவான அறிக்கை தயாரிக்க நீங்கள் மற்ற இருவரின் ஒப்புதலைப் பெற வேண்டும்" என்று மஸானிக்குக் கடிதம் எழுதினார் ஸி. ஆர். இவர்கள் இப்போது மேற்கொண்டது காலம் கடந்த முயற்சிதான். இந்திரா முந்திக் கொண்டிருந்தார். என்றாலும் மூன்று கட்சிகளும் கூட்டாகச் சேர்ந்து இந்திரா காங்கிரஸை எதிர்க்கும் என்பது போல்தான் தோன்றியது.

புதுடில்லியில் நிஜலிங்கப்பா வீட்டில் ஜனவரி 3 — ஆம் தேதி இரவு நல்ல செய்தி கிடைக்கும் என்று நாளிதழ்களுக்குக் கூறப்பட்டது. ஆனால், குறிப்பிட்ட நேரத்துக்குச் சில மணி முன்னதாக எஸ். எஸ். பி. கட்சியைச் சேர்ந்த ராஜ்நாராயண், மது லிமாயி, ஜார்ஜ் ஃபெர்னாண்டஸ் ஆகிய மூவரும் நிஜலிங்கப்பாவையும், வாஜ்பேயியையும் சந்தித்து, சுதந்திரக் கட்சியை விடத் தங்கள் கட்சி முக்கியமானது என்று நம்ப வைப்பதில் வெற்றி கண்டனர்! உடனே பழைய காங்கிரஸ், ஜனசங்கம், எஸ். எஸ். பி. ஆகிய மூன்றும் சேர்ந்து ஒரு பொது அறிக்கையைத் தயாரித்தன . இதில் கையெழுத்திட மசானி தயங்கினார். இரவு நிஜலிங்கப்பா வீட்டுக்கு நாளிதழ் நிருபர்கள்




இரட்டையர்கள் :

சந்தோஷங்களும் சங்கடங்களும்.

— சிறப்புக் கட்டுரை.

குறித்த நேரத்துக்கு வந்து சேர்ந்த போது, வாஜ்பேயி சொன்னார்: ''நாங்கள் மூவராக இருந்தோம்; மூவராகவே இருக்கிறோம்! சுதந்திரக் கட்சி வெளியேறி விட்டது; எஸ். எஸ். பி. உள்ளே வந்துவிட்டது!''

பேட்ரியாட் பத்திரிகை, ''எஸ். எஸ். பி. கட்சியின் தகர்ப்புக்குழு, மாபெரும் எதிர் அணியைத் தரைமட்டமாக்கி விட்டது'' என்று எழுதியது. எனினும் ஒரு வாரம் சென்று சுதந்திரக் கட்சி தன் துயரத்தை விழுங்கி விட்டுப் புதிய அணி வகுப்பில் தானும் பங்கு பெறத் தீர்மானித்தது. மஸானிக்கு இதில் விருப்பமில்லைதான்; ஆனால் ''எதிர்க்கட்சிகளின் ஒற்றுமைக்குச் சுதந்திரக் கட்சி முட்டுக்கட்டை போட்டு விட்டது'' என்ற குற்றச்சாட்டை வரவேற்பது போல் நடந்து கொள்ளச் சுதந்திரக் கட்சி தயாராக இல்லை. ஆயினும் என்ன? தம்மை எதிர்த்தவர்களின் கூட்டணியை ''மகத்தான கலப்படம்'' என்று இந்திரா வர்ணிப்பதைத்தவிர்க்கமுடியாதுபோயிற்று. ''இந்திராவை எதிர்ப்போம்; இந்தியாவைக் காப்போம்'' என்ற கோஷமானது, சுதந்திரக் கட்சிக்கும் எஸ். எஸ். பி.க்கும் இடையே இருந்த வேற்றுமைகளை மறைத்துவிட முடியவில்லை; ஜனசங்கத்துக்கும் சுதந்திரக் கட்சிக்கும் இடையே இருந்த கருத்து மாறுபாடுகளையும் மூடி மறைத்துவிட முடியவில்லை.

''ஏழைமையை ஒழிப்போம்'' என்ற இந்திராவின் கோஷம், அவரை மிகச் சுலபமாக வெற்றி பெறச் செய்தது. ''மக்கள் சமூகம் முழுமையும் எந்த திக்கில் பாரதம் செல்ல வேண்டும் என்பதை நிர்ணயிக்கும் விதமாக வோட்டுப் போட்டிருக்கிறது'' என்று இந்திரா வெற்றிப் பெருமிதத்துடன் கூறியது, மிகைப்படுத்திய பேச்சுத்தான் என்றாலும், அவரது கட்சி 350 இடங்களை நாடாளுமன்றத்தில் பெற்றது. ஆனால் மொத்த வோட்டில் 43.64 சதவீதம்தான் இ. காங்கிரஸ் பெற்றிருந்தது என்பது குறிப்பிடத்தக்கது.

சுதந்திரக் கட்சிக்குப் பலத்த அடி! 44 இடங்களிலிருந்து எட்டாகக் குறைந்து போயிற்று, நாடாளுமன்றத்தில் அதன் பலம். மசானி, ரங்கா ஆகிய இருவருமே தோற்றனர்! பழைய காங்கிரஸைச் சேர்ந்த ராம் சுபாசிங், சஞ்சீவ ரெட்டி, எஸ். கே. பாட்டீல் ஆகியோர் தோல்வியைத் தழுவினர். 1967 — இல் தில்லியில் மாபெரும் வெற்றி பெற்றிருந்த ஜனசங்கம் இன்று அந்நகரில் தலைகுனிவைச் சந்தித்தது! மது லிமாயி, ராஜ் நாராயண் ஆகிய இருவரும் தோற்றனர். சுதந்திரக் கட்சி வேட்பாளராகத் தென் சென்னைத் தொகுதியில் போட்டியிட்ட ஸி. ஆரின் மகன் நரசிம்மனும் தோற்றுப் போனார்.

இந்திரா காந்தியை உற்சாகத்துடன் ஆதரிப்பவராக உருமாறியிருந்த கருணாநிதி, இந்திராவைப் பின்பற்றி, தமிழக சட்டமன்றத்தைக் கலைத்து, நாடாளுமன்றத் தேர்தலுடன் சேர்த்துச் சட்டமன்றத் தேர்தலையும் நடத்த வழி வகுத்தார். ராஜாஜியும் காமராஜரும் சேர்ந்திருப்பது போன்ற படங்கள், சுவரொட்டிகளில் முதன் முதலாகக் காணப்பட்டன. இந்திரா காந்தியுடன் தாம் கூட்டணி அமைத்திருப்பதைக் கருணாநிதி விளம்பரப்படுத்தினார். பழைய காங்கிரஸ் — சுதந்திரா வட்டாரத்தில் பெரிய அளவில் எதிர்பார்ப்புக்கள் வளர்ந்திருந்தன. தி.மு.க. ஆட்சியின் லஞ்ச ஊழல்கள் பற்றிய கதைகள் இப்போது மிகப் பிரபலமாகி விட்டிருந்த படியால், 'நிச்சயம் அது வீழ்ந்து விடும்' என்ற நம்பிக்கை வளர்ந்திருந்தது.

''ராஜாஜி, மறுபடி முதலமைச்சராக நீங்கள் தயாராக வேண்டியதுதான்!'' என்று ஜோக் அடித்தார் காமராஜர். உண்மையில் இருவருமாகச் சேர்ந்து, உருவாகக் கூடிய மந்திரிசபை பற்றிக் கூட விவாதித்திருந்தார்கள். ஆர். வேங்கடராமனை முதல்வராக்குவது என்று முடிவு செய்திருந்தார்கள்.

தமது நௌரோஜி ரோடு வீட்டில் அமர்ந்தபடி, தேர்தல் முடிவுகளை ஒரு கடன் வாங்கிய டிரான்ஸிஸ்டரில் கேட்ட போது, ஸி. ஆரின் முகத்தில் எந்தவிதமான உணர்ச்சியையும் காணோம்! ஆனால் அவர் அதிர்ச்சி அடைந்துதான் இருந்தார். நம்பவே முடியாதபடி, தி. மு. க. 183 இடங்களைச் சட்டசபையில் கைப்பற்றி இருந்தது. சுதந்திராவும் பழைய காங்கிரஸும் சேர்ந்து மொத்தம் 21 இடங்களையே பெற்றிருந்தன!

(தொடரும்)



பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி.

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதரவர்களால், 1542 — இல் ஸ்தாபிக்கப்பட்டு, தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 90 மாணாக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஒரு நாள் உணவளிக்க, உணவு வகையினை அனுசரித்து சுமார், முறையே ரூ. 250/- அல்லது 300/- அல்லது 500/- ஆகிறது. இந்தத் தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ. 2500/- அல்லது 3000/- அல்லது 5000/- மூலதனம் ஏற்படுத்தியோ, அவ்வப்போது தொகை அனுப்பியோ, ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம். நன்கொடை அனுப்பவேண்டிய பெயரும் முகவரியும்:

**அத்வைத வித்யாசார்யா மஹாராஜா ஸாஹேப் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி,**
**D — 76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி;**
**கும்பகோணம் — 612 001.**

****இந்த நன்கொடைக்கு 80-G விதியின்படி வருமான வரிவிலக்கு உண்டு****

* 21—ம் நூற்றாண்டுக்குப் பாரதத்தை அழைத்துச் செல்வார் ராஜீவ், என்று நம்பியவர்களின் நல்லெண்ணத்தில் ஊழல் இடிகளாக இறக்கி விட்டவரை, காங்கிரசின் தலைமைப் பொறுப்பிலிருந்து உடனே நீக்க வேண்டியதன் அவசியத்தைத் தங்களின் தலையங்கம் கட்டிக் காட்டிய விதம் அருமையானது.

பொசலூர், அ. இராஜப்பன்.

* 'ராஜீவிடம்ராஜினாமாகேளுங்கள்' தலையங்கம் கண்டு மிகுந்த அதிர்ச்சியடைந்தேன். பத்து மாநிலங்களுக்கு நடந்த தேர்தலில் இரண்டில் காங்கிரஸ் ஆட்சியைப் பிடித்துள்ளது. இரண்டில் தனிப் பெரும்பான்மை கட்சியாக வந்தும் ஆட்சியமைக்காமல் உள்ளது. கர்நாடகா, ஆந்திராவில் ஏற்பட்டது போன்ற ஆட்சி மாற்றம் வட மாநிலங்களிலும் ஏற்பட்டுள்ளது. இதைக் காங்கிரஸின் வீழ்ச்சியென்றோ, ராஜீவின் தோல்வியென்றோ முத்திரை குத்தி ராஜீவின் ராஜினாமாவைக் கோருவது பெரும் தவறு. மேலும் ராஜீவுக்கு இது முதல் கற்றுத் தோல்விதான்.

திருவைகுண்டம்,
கே. ராமகிருஷ்ணன்.

* பிரதமர் வி. பி. சிங்கின் அரசியல் நடவடிக்கைகளைத் துல்லியமாக விமர்சித்துப் பாராட்ட வேண்டியவற்றை மனப்பூர்வமாகப் பாராட்டி, குறைகளை நாசுக்காகச் சுட்டிக்காட்டி, விருப்பு வெறுப்பில்லாமல் எழுதியிருந்ததோடு, ஆங்காங்கே ஆக்கபூர்வமான ஆலோசனைகளையும் வழங்கி அமர்க்களப்படுத்தி விட்டார் டாக்டர். எம். எஸ். உதயமூர்த்தி. சபாஷ்!

கும்பகோணம்,
எஸ். வெங்கடேசன்.

* கேள்விக்குறி எதற்கு? சந்தேகம்தான் எதற்கு? 'மிருகயா' விமர்சனத்தில் வி. ஆர். கே.யின் பாராட்டைப் பெற்றுள்ள நான், தமிழ் சினிமா உலகைச் சேர்ந்த 'கோடை மழை' வித்யாவேதான். மலையாளத்தில் என்னை எனது இயற்பெயரில்'கனிதா' என்றே அழைக்கின்றனர்.

சென்னை — 24. வித்யா.

* தூய அன்பிற்கு முன்னால் கறுப்பென்ன, சிவப்பென்ன, என்பதை அழகாகப் படம் பிடித்துக் காட்டிய அருமையான கதை, சங்கரி அப்பன் எழுதிய 'சந்தனமும், கருஞ்சாந்தும்!'

விழுப்புரம் — 2.
கே. ராஜலட்சுமி.

* பிரதிபா ராஜகோபாலனின்

# இளைய தலைமுறைக்கு ஒரு பாடம்!

'விடியோவினால் நின்று போன விவாகம்' சிறுகதை படித்தேன். நடைமுறை வாழ்க்கையின் பிரதிபலிப்பை அப்படியே படம் பிடித்து மனத்தை நெகிழ வைத்து விட்டார்!

புதுச்சேரி. வே. தென்பரிதி.

* 'பூவுக்குள் பூகம்பம்' படத்திலேயே அறிமுகமாகி விட்ட இசையமைப்பாளர் சங்கீதராஜனைப் போய் 'யாரிந்தப் புது இசையமைப்பாளர்?' என்கிறாரே உமது விமர்சகர்? ஆச்சரியமாக இருக்கிறது.

கும்பகோணம், எல். கலாபிரபா.

* கவிதைக்குள் ஒரு கவிதையில் அரைநொடி நின்றோம்யாம் இவண் ஆயிரம் காதம் பின்னடைந்தோம்' —கவிதை வரிக்கான கருத்து. இன்றைய இளைய தலைமுறையினருக்குப் பாடமாக அமைய வேண்டும்.

அல்லூர், கண்ணம்மா.

* மனிதர்களுக்கு வரும் மகா கொடுமையான நோய்களில் ஒன்றான புற்று நோய்க்கு எலும்புச் சாறு மாற்று அறுவைச் சிகிச்சை முறை என்பது மருத்துவ உலகில் ஓர் அற்புதக் கண்டுபிடிப்பு! இந்தச் சிகிச்சையை அமெரிக்க நாட்டிலுள்ள ஃபோர்டு மருத்துவமனையில் நம் இந்தியாவில் பிறந்த டாக்டர் நளினி ஜானகிராமன் செய்கிறார் என்பது நமக்கெல்லாம் மிகவும் பெருமைக்குரிய விஷயமாகும்.

லால்குடி, எம். இராஜேந்திரன்.

* முதல் பக்கத்திலேயே தென்னை சாகுபடி பற்றி, அனைவருக்கும் காலம் காலமாகப் பயனளிக்கக் கூடிய செய்திகளை வெளியிட்டமைக்கு நன்றி.

திருச்சி — 16. ஞானகிமைந்தன்
எஸ். ராஜகோபால்.

* குழந்தை இலக்கியப் படைப்பில் கோட்டை கட்டிக் கொடியேற்றிய குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா அவர்கள் மறைந்து ஓராண்டு ஆகி விட்டதா? நம்பவே முடியவில்லை!

திருக்குவளை.
கவிஞர். வெற்றிப்பேரொளி.

* 11.3.90 இதழில் நாரதரின் கேள்வி பதிலில் ஜெயலலிதாவுக்கு ஏற்பட்ட விபத்து பற்றிய பதிலில் கொஞ்சங்கூட நடுநிலை இல்லை. ஜெயலலிதாவை மோதிய லாரி முன்னும் பின்னும் சென்ற வண்டிகளில் மோதவில்லை. FIRரிலும் பசு மாடு குறுக்கே வந்து அடிபட்டதாக இல்லை. கார் ஓட்டியும் தூக்கக் கலக்கத்தில் இல்லை — குறைந்தபட்சம் இவ் விபத்தில் பாதிக்கப்பட்டுள்ள ஜெயலலிதா சீக்கிரமே குணமாக வேண்டும் என்ற கருத்தையாவது நீங்கள் கூறியிருக்க வேண்டும்.

செண்பகவியநல்லூர், முருகு.

* சஞ்சய்கான் பேட்டி படித்தேன். "ஒரு மனிதனை நல்லவனாகச் சித்திரிப்பதில் யாருக்கு என்ன கெடுதல் விளையும்!" அட்சரலட்சமான அர்த்தமிகு வரி. தீமையை — வன்முறையைக் காட்டிக் காட்டி மக்களைக் குட்டிச் சுவராக்குவது போதாதா? ஏன், அந்தத் திப்புவுக்கு கறுப்புப் பக்கமும்தான் இருக்கட்டுமே — அவசியம் அதையும் காட்டித்தானாக வேண்டுமா?

இந்தத் தொடர் ம.வி.யால் முதலில் அங்கீகரிக்கப்பட்டு விட்ட பின், அரசு தன் தார்மீகப் பொறுப்பை மீறுவது சரியல்ல. அரசு மாறுவதாலேயே அதன் அங்கீகாரங்களும் அடுத்தடுத்து வருபவர்களால் மாற்றப்படுவது, எந்த நீதிக்கும் ஏற்புடையதல்ல!

மதுரை — 2. சுபாஷ்சந்திரன்.

* சஞ்சய் கானின் சிறப்புப் பேட்டி படித்தேன். பகவான் எஸ். கித்வானி எழுதிய "திப்பு சுல்தானின் கத்தி" என்ற புதினம் செப்டம்பர், 1976லேயே வெளியிடப்பட்டு விட்டது. இதை 19.12.1976 தேதியிட்ட ஹிந்துஸ்தான் டைம்ஸ் என்ற நாளிதழில் மதிப்பீடு செய்த போது எம். ஜி. காப்ரியல் குறிப்பிட்டதாவது: "திப்புசுல்தானை முதல் தேசியவாதி', 'மத அமைதியில் நம்பிக்கைக் கொண்டவர்,' 'அஹிம்சை உபதேசி' என்றெல்லாம் கூறுவது அநாவசியமானதாகும்" என்று கண்டித்துள்ளார். அன்றே முக்கியமான தேசிய நாளிதழ்களில் வெளிவந்த பல கடிதங்களில் திப்பு சுல்தானின் நடவடிக்கைகள் விவாதிக்கப்பட்டன. பல கட்டுரைகளும் நூல்களும் எழுதப்பட்டன. ஆகவே 1978ல் சஞ்சய் கான் அப் புத்தகத்தின் உரிமைகளை வாங்கிய போது அவருக்கு இது பிரச்னைக்குரிய புத்தகம் என்பது தெரிந்தே இருக்க வேண்டும். அப்படித் தெரியாமல் வாங்கியிருந்தால் அது அவருடைய தவறே!

சென்னை — 33. கே. சித்ரா ரா

அறைக்குள் வந்த மேனேஜர் தமது டை முடிச்சை ஒரு கையால் சரி செய்து கொண்டார். மறுகையில் ஃபைல்கள் இரண்டை ஏந்தித் தம் மார்போடு அணைத்துக் கொண்டிருந்தார்.

''ரொம்ப முக்கியமான விஷயமா இருந்ததால் வீட்டுக்கு வந்தேன் சார். உங்க பிரதர் கூடப் பேசினேன். அவர்தான் உள்ளே போய்ப் பேசுங்கன்னு சொன்னார். தொந்தரவு செஞ்சதுக்கு ஸாரி.''

கிருஷ்ணன் மற்றொரு சிகரெட்டைக் கொளுத்திக் கொள்ள, அரவிந்த் தன் முள் தாடியை தாடைப் பகுதியில் லேசாகத் தடவிக் கொண்டே, ''வந்ததும் என்னவோ சொன்னீங்களே, என்ன அது?'' என்றான்.

''இது உங்க சொந்தப் பிரச்னை மட்டுமில்லைன்னு சொன்னேன். நான் சொன்னது கொஞ்சம் அதிகப்பிரசங்கித்தனம்தான். ஆனா ஆபீஸில் திடீர்னு ஏற்பட்டிருக்கிற டென்ஷன்ல கொஞ்சம் அத்து மீறிப் பேசிட்டேன். ஸாரி.''

# வல்லமை தாராயோ?

22

''பரவாயில்லை. எதுக்காக அப்படிச் சொன்னீங்க?''

''கொஞ்சம் உரிமையோட மனம் திறந்து பேச எனக்கு பர்மிஷன் தருவீங்கன்னா சில விஷயங்களைச் சொல்றேன்.''

''சொல்லுங்க.''

''மிஸ். வந்தனா விவகாரம் எல்லா பத்திரிகைகளிலேயும் வந்துடுச்சி. நீங்களும் சந்தேகத்துக்கிடமில்லாம போட்டோ ஸோட பேட்டிகள் கொடுத்துட்டீங்க. இது உங்க சொந்த விவகாரம்தான். ஆனா நீங்க ஒரு பெரிய நிறுவனத்தோட முதலாளிங்கிறதால வேற பலவகை பாதிப்புகள் இருக்கு. ஆபீஸ்லையும் சரி, ஃபேக்டரிலையும் சரி தொழிலாளிங்க உங்களைப் பத்தி கிண்டலாப் பேசறாங்க. ஸாரி டு ஸே திஸ். உங்களுக்குப் பைத்தியம் பிடிச்சிருச்சின்னு கூட கமெண்ட்ஸ் அடிக்கிறாங்க.''

அரவிந்த் லேசாக முகம் சிவக்க ஆரம்பித்தான்.

''இதைச் சொல்லத்தான் வேலை மெனக்கெட்டு வந்தீங்களா?''

மானேஜர் மௌனமாக நின்றார்.

''நான் என் கம்பெனியைப் பத்திக் கவலைப் பட்டாத்தானே, அப்புறம் வொர்க்கர்ஸ் பத்தி, அவங்க அடிக்கிற கமெண்ட்ஸ் பத்திக் கவலைப் படறதுக்கு. எனக்கு இப்போ அதைப் பத்தியெல்லாம் அக்கறை இல்லை. யார் வேணும்னாலும் எப்படி வேணும்னாலும் பேசட்டும். ஐ டோண்ட் கேர். என் மனசுக்கு நியாயமாப் பட்டபடி பேசுவேன். நடந்துக்குவேன். யாரும் எனக்கு அட்வைஸ் பண்ணத் தேவையில்லை.''

''மன்னிக்கணும் சார். உங்ககிட்டே பர்மிஷன் கேட்டுத்தான் பர்சனலாப் பேசினேன். நான் அட்வைஸ் பண்றதுக்காக வரலை.''

''பின்னே எதுக்கு வந்தீங்க?''

''கம்பெனியைப் பத்தின சில தகவல்களை, புள்ளி விவரங்களைச் சொல்லி, ஆலோசனை கேட்டுட்டுப் போறதுக்காக வந்தேன்.''

''என்ன அது?'' என்றான் அரவிந்த் வெறுப்பாக.

''பேப்பர்ல செய்தி வெளிவந்த தினத்திலேர்ந்து நம்ம கம்பெனியோட பேர்ல இருந்த மதிப்பு சரிய ஆரம்பிச்சிருக்கு சார். ஷேர் மார்க்கெட்டில் நம்ம பத்து ரூபா ஷேர் எண்பத்தி நாலு ரூபாய் வித்தது. மளமளன்னு சரிஞ்சு முப்பத்தி ஏழு ரூபாய்க்கு வந்துடிச்சி. நேத்தும், இன்னைக்கும் நில் ட்ரான்சாக்ஷன்ஸ். ஸ்டாக் எக்ஸ்சேஞ்சு ப்ரோக்கர்ஸ் போன் மேல் போன் போட்டுத் துளைச்சி எடுக்கறாங்க. நீங்க அரெஸ்ட் ஆய்டுவீங்கன்னும், கம்பெனி நிர்வாகம் சிதறிடும்னும் பிஸ்னெஸ் மேகசின்ஸ்ல ஹேஸ்யங்கள் வந்திருக்கு. பதினேழு லட்ச ருபாய்க்கு நாம கேட்டிருந்த ஒரு கடனை இப்ப சேங்ஷன் பண்ண வேணாம்னு நம்ம பேங்கர்சுக்கு அவங்க ஹெட் ஆபீஸ் உத்தரவு போட்டு இவங்க அதை நிறுத்தி வச்சிட்டாங்க. பிரைவேட் ஃபைனான்சியர்ஸ் போன்லயும், நேர்லயும் பேமெண்ட்ஸ் கேட்டு நெருக்க ஆரம்பிச்சிட்டாங்க. இதையெல்லாம் உங்க கவனத்துக்குக் கொண்டு வர வேண்டியது என் கடமை சார். யார், யாருக்கு எப்படி, எப்படி பதில் சொல்லணும்னு நீங்க சொல்றீங்களோ, அப்படி சொல்லிடறேன்.''

அரவிந்த் கண்கள் சிவந்தன. அவர் சொல்வதெல்லாம் உண்மை என்றாலும் அவனுக்குள் டென்ஷன் ஏகமாய் ஏறிப் போய், ''கெட் லாஸ்ட் ஐ சே! நான் நிமிர்த்தின கம்பெனி இது. எப்படி சீரழிஞ்சாலும் எனக்குக் கவலையில்லை. ஒரு பொண்ணோட இதயத்தை ஜெயிக்க முடியலை! எது எப்படிப் போனா என்ன! எத்தனை லட்சம் போனா என்ன! ஐ டோண்ட் கேர்! கோ அவே! என் முன்னாடி நிக்காதீங்க. முதல்ல வெளில போங்க'' என்று கழுத்து



நரம்புகள் புடைக்கக் கத்தினான்.

கிருஷ்ணனையும், அரவிந்தையும் மௌனமாகப் பார்த்து விட்டு மேனேஜர் கைக் குட்டை எடுத்துத் தம் முகத்தில் துளித்த வியர்வைத் துளிகளை ஒற்றிக் கொண்டு வெளியேறினார்.

கிருஷ்ணன் அரவிந்த் அருகில் வந்து, அவன் தோளில் கை வைத்து, "நீ இவ்வளவு கோபப் படறதில, உணர்ச்சிவசப் படறதில அர்த்தமே இல்லை. அவர் என்ன உன் எதிரியா? உண்மை நிலைமைகளைச் சொல்றார். அவரைப் போய் நீ....."

தன் தோளில் இருந்த கிருஷ்ணனின் கையைத் தட்டி விட்டான் விருட்டென்று அரவிந்த். "எனக்கு யாரோட அட்வைசும் தேவையில்லைன்னு சொன்னது, உன்னையும் சேர்த்துத்தான்" என்றான்.

"கொஞ்சம் பொறுமையா இரு. நீ இவ்வளவு படபடப்பா இருந்ததே இல்லை. எதுவும் ஆய்டலை. எல்லாத்தையும் நிமிர்த்திடலாம். எல்லாம் சரி செஞ்சிடலாம். நீ ம்ன்னு ஒரு வார்த்தை சொல்லு. இந்தக் கேசை உடைக்கிறதுக்கு நூறு வக்கீல்கள் தயாரா இருக்காங்க. முதல்ல இந்தச் சட்டச் சிக்கல்லேர்ந்து நீ விடுபட்டாகணும். உன்னை நம்பி....."

கிருஷ்ணனை மேற்கொண்டு பேச விடாமல் அவன் கையைப் பிடித்துத் தரதரவென்று அறை வாசல் கதவுவரை இழுத்து வந்து, கதவைத் திறந்து, "வெளில போகச் சொன்னதும் உன்னையும் சேர்த்துதான். லீவ் மீ அலோன்" என்று கத்தினான் அரவிந்த்.

கிருஷ்ணன் மேற்கொண்டு பேச இயலாமல் எச்சில் விழுங்கிக் கொண்டு வெளியே மௌனமாக வர... அவன் முதுகுக்குப் பின்னால் அறைக் கதவு படீரென்று அறைந்து சாத்தப்பட்டது.

அறைக்கு வெளியே அரவிந்த் அண்ணன் சிவராம் ஒரு மூங்கில் நாற்காலியில் அமைதியாக அமர்ந்திருந்தார். அருகில் கம்பெனியின் மேனேஜர் நின்று கொண்டிருந்தார். கிருஷ்ணன் தளர்வோடு சிவராம் அருகில் அமர்ந்தான்.

"என்ன சொல்றான்?" என்றார் சிவராம்.

"சொந்த அண்ணன் நீங்க சொல்லியே

பட்டுக்கோட்டை பிரபாகர்

எடுபடாத இடத்தில், நான் சொல்லியா எடுபடும்? திடீர்னு சாந்தமாய்ப் பேசறான். திடீர்னு பாயறான். எனக்கு ஒண்ணும் புரியலை. ரொம்ப அபத்தமா இருக்கு அவன் பிடிவாதம். பின்விளைவுகள் எதைப் பத்தியும் கொஞ்சம்கூடக் கவலைப்படறதாத் தெரியலை. மேனேஜர் இப்ப சொன்ன விஷயங்கள் எல்லாம் எனக்கு பகீர், பகீர்னு இருக்கு. ஆனா அவன் அதுக்காக அலட்டிக்கவே இல்லை. வந்தனா மனசை ஜெயிக்க முடியலையே, ஜெயிக்க முடியலையேன்னு அதே புலம்பலாப் புலம்பறான். உண்மையாச் சொல்லணும்னா... இது ஒரு வகை மன நோய்தான்.''

சிவராம் தன் கையை வீசி அவன் கருத்தை மறுத்தார்.

''மன நோயாவது, மண்ணாங்கட்டியாவது! அதெல்லாம் எதுவும் இல்லை. இது பிடிவாதம். வறட்டுப் பிடிவாதம். சின்ன வயசிலேர்ந்தே இருக்கிற பிடிவாதம்.''

''எனக்கென்னவோ ஒரு நல்ல சைக்கியாட்ரிஸ்ட்டை உடனே வரவழைச்சு அரவிந்தை தீவிரமா கவனிக்கச் சொல்லணும்னு தோணுது.''

''தம்பி கிருஷ்ணா, இப்ப நடக்கிற விஷயமாப் பேசு. அப்படியே அவனுக்கு மனசுல ஒரு டிப்ரஷன் ஏற்பட்டிருக்கிறதா வச்சிக்கிட்டாலும் அதுக்கு வைத்தியம் பார்க்க இது நேரமா? நாளைக்கு கேஸ் விசாரணைக்கு வருதுப்பா'' என்றார் சிவராம் கவலையுடன்.

''அப்ப என்னதான் சார் செய்யறது?'' என்றார் மேனேஜர்.

''இப்ப நாம் பார்க்க வேண்டிய ஒரே டாக்டர் அந்தப் பொண்ணு வந்தனாதான்'' என்று எழுந்து கொண்டார் சிவராம்.

''பார்க்கக் கூடாதுன்னு கத்தறான் சார் அவன்.''

''அவன் கெடக்கறான். உனக்கு அந்தப் பொண்ணு வீடு தெரியுமா?''

''தெரியும்.''

''வா என்னோட. மேனேஜர், நீங்களும் வாங்க.''

சிவராம் ஓரத்தில் வைத்திருந்த தமது வாக்கிங் ஸ்டிக்கை எடுத்துக் கொண்டு புறப்பட்டார்.

**வ**ந்தனா தனது அறையில் ஜன்னல் அருகே நாற்காலி போட்டுக் கொண்டு அமர்ந்து சுறுசுறுப்பான வாகனப் போக்குவரத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

பாபுவைச் சந்தித்து அவரின் மனைவி தாராவின் கதையை அறிந்து வந்த பாதிப்பு மனத்தில் அப்படியே இருந்தது. தனக்குள்ளேயே கோர்ட் நியமித்து அவளுக்காகப் பல கோணங்களில் வாதிட்டுப் பார்த்தாள். எப்படிப் பார்த்தாலும் அவள் செயலில்

நியாயம் இருப்பதாகத் தெரியவில்லை. ச்சே என்று ஒரு அருவருப்புத்தான் மிஞ்சியது.

சிவப்பு விளக்குப் பெண்கள் அத்தனை பேரின் பின்னணிக் கதைகளிலும் ஓர் ஆணின் கொடுமைதான் இருக்கும் என்று பைத்தியக்காரத்தனமாக நினைத்துக் கொண்டிருந்தேனே. சொந்தத் திமிரிலும் தன் குடும்பத்தை எட்டி உதைத்து விட்டுக் கூட வருவதுண்டு என்பது எவ்வளவு கசப்பான உண்மை!

தாரா மாதிரியான பெண்கள் இந்த உலகத்தில் இன்னும் எவ்வளவோ பேர் இருப்பார்கள் — வேறு வேறு விதங்களில் ஆண்களுக்கு பாதிப்பு ஏற்படுத்திக் கொண்டு. இந்த உலகத்தை மிகச் சிறிய ஜன்னல் வழியாக நான் பார்த்து விட்டேனா? என் வாழ்வில் எனக்கும், என்னைச் சுற்றியிருப்பவர்களுக்கும் ஏற்பட்ட அனுபவங்களை மட்டும் வைத்து ஒரு தீர்மானத்திற்கே வந்து விட்டேனோ? உலகம் மிக விசாலமானது — அதில் விசித்திர, வினோதமான குணச்சித்திரங்கள் எவ்வளவோ இருக்கும் என்பது என் புத்திக்கு மட்டுப்படாமல் போனதெப்படி? தாரா மாதிரியான பெண்களும் இந்த பூமியில் இருக்க, ஒட்டுமொத்தமாகப் பெண்கள் அத்தனை பேருமே ஆண்களால் பாதிக்கப் படுபவர்கள் என்றும், தியாக குணம் மிக்கவர்கள் என்றும் பிடிவாதக் கருத்தை மனதில் எழுதிக் கொண்டது எத்தனை முட்டாள்தனம்.

எது உண்மை? பெண்கள் மென்மையானவர்களாய், மேன்மை குணம் பொருந்தியவர்களாக இருக்கலாம். ஆனால் அவர்கள் மத்தியிலும் சில மோசமானவர்கள் உண்டு. அதே போலத்தானே மற்றொரு கருத்தும். ஆண்கள் அத்தனை பேரும் ஆளுமை குணமும், அதிகாரத் திமிரும் படைத்தவர்கள் அல்ல, பொறுமைசாலிகளும் நிறையப் பேர் இருக்கிறார்கள்.

கண்ணெதிரில் உதாரணம் — பாபு! தன் மனைவி துரோகம் செய்வதை தம் கண்களால் பார்த்து விட்ட எந்த மனிதன் நிதானம் தவறாமல் பொறுமையாக அவளுக்கு ஆறுதல் சொல்லி மன்னிக்கவும் தயாராக இருப்பான்?

அவர் கேட்டது போல, அரவிந்தின் அணுகுமுறைகள் என் தப்பான கண்ணோட்டத்தின் காரணமாக எனக்குள் எரிச்சலையும், வெறுப்பையும் ஏற்படுத்தியிருக்கலாம்.

ஆனால் அவரின் அன்பு ஏன் உண்மையாக இருக்கக் கூடாது?

திடீரென்று தன் தலையை அசைத்துக் கொண்டாள் வந்தனா.

சேச்சே! என்ன ஆயிற்று எனக்கு! பாபுவைச் சந்தித்துப் பேசி விட்டு வந்ததில் இருந்து என் அடிப்படை கோட்பாடுகளே



இன்ஸ்பெக்டர்: "ஏம்பா நேற்று அரோரா பேங்குல கொள்ளையடிச்சது உங்க கோஷ்டியா...?"

திருடன்: "இல்லீங்க; எங்க அதிருப்தி கோஷ்டி!"

— கடுவை. கோபால்சாமி.

---

தடுமாறுகின்றனவே!

"வந்தனா" என்று உள்ளே வந்தான் கோபி.

"என்னண்ணா?"

"உன்னைப் பார்க்கறதுக்காக அரவிந்தோட அண்ணன் வந்திருக்கார். நீ உன் எண்ணத்தை மாத்திக்க வேணாம். ஆனா வயசுக்கு மரியாதை கொடுத்து, எடுத்தெறிஞ்சு பேசாம சந்திக்கிறதுதான் முறை. என்ன சொல்றார்னு பொறுமையாக் கேட்டுக்கோ. படபடன்னு பொரியாம, வாதம் எதுவும் பண்ணாம முழுசா கேட்டுக்கோ. அப்புறம் பதில் சொல்லு, வர்றியா?"

வந்தனா தன் அறையை விட்டு வெளியே வந்தாள். ஒரு நாற்காலியில் அரவிந்த் அண்ணன் சிவராம் அமர்ந்து கோபி கொடுத்த தண்ணீரைக் குடித்துக் கொண்டிருக்க, அருகில் மேனேஜர் நின்றார். தான் வரவில்லை என்று கீழே காரிலேயே தங்கி விட்டான் கிருஷ்ணன்.

"வணக்கம்" என்றாள் வந்தனா பொதுவாக.

கை கூப்பின சிவராம், "நான் அரவிந்தோட அண்ணன். இவர் உங்களுக்குத் தெரியும். மேனேஜர். நடந்த விஷயங்கள் ஒண்ணு விடாம எல்லாம் எனக்குத் தெரியும். எனக்கு அம்பத்தி நாலு வயசாகுது. என் வாழ்க்கைல நான் உன்னை மாதிரி ஒரு வித்தியாசமான பொண்ணைச் சந்திச்சதில்லை. தன் பேர் ரிப்பேரானாலும் தனக்கு நடந்த கொடுமைக்கு நியாயம் கிடைச்சாகணும்னு பிடிவாதமாப் போராடறே. சந்தோஷம். ஆனா ஓர் உண்மையை நீ மறந்துட்டே. இல்லைன்னா புரிஞ்சுக்கலை" என்றார்.

(தொடரும்)



* மீண்டும் ஒரு சூப்பர் கார்...



* அந்த ஒரு ஏக்கம்



* ஐஸ்வர்யா



* கஸ்தூரி ராஜா

# மீண்டும் ஒரு சூப்பர் கார்!

●● நடிகர் சிவகுமார் ஒரு பள்ளிக்கூட ஆண்டு விழா நிகழ்ச்சியில் கலந்து கொண்டு பரிசுகள் வழங்கினார். பரிசு வாங்க வருகின்ற ஒவ்வொரு குழந்தையையும் நேரே திருப்பி, மிகப் பொறுமையாகப் பரிசு கொடுப்பது போல போட்டோவுக்குப் போஸ் கொடுத்துக் கொண்டிருந்தார். நேரம் செலவாவதைப் பொருட்படுத்தாத சிவகுமாரின் இந்தச் செயல் எல்லோரையும் ஆச்சரியப்படுத்திற்று! என்ன காரணம்? இந்தக் கேள்விக்கு சிவகுமாரே, ''அப்போது நான் படித்துக் கொண்டிருந்த பள்ளிக் கூடத்தின் ஆண்டு விழா! போட்டோவுக்கும் டீ பார்டிக்கும் சேர்த்து இரண்டு ரூபாய் கொண்டு வரச் சொல்லியிருந்தார்கள். அம்மாவிடம் பணம் கேட்டேன். அம்மா காசு இல்லை என்று கூறி விட்டார். வகுப்பு முடிந்ததும் வீட்டிற்குத் திரும்பினேன். பசங்க எல்லாம் துட்டுத் தராட்டியும் பரவாயில்லை போட்டோவுலே மட்டும் நின்னுட்டுப் போடா என்று கூறினார்கள். என் மனசு அதற்கு இடம் தரவில்லை. பேசாமல் திரும்பி வந்து விட்டேன். அந்தப் போட்டோவில் என்னைத் தவிர என் வகுப்பு மாணவர்கள் எல்லோரும் இருந்தார்கள். அதற்குப் பிறகு இதுவரை எத்தனையோ போட்டோ பிளாஷ்கள் என் முகத்தில் ஒளி சிந்தியிருக்கின்றன. ஆனால் என் மனசு அந்த ஒரு போட்டோவுக்காகத்தான் இன்னும் ஏங்கிக் கொண்டிருக்கிறது'' என்று மிகவும் நெகிழ்ச்சியாகக் கூறினார்.

●● நடிகை லட்சுமியின் மகள் ஐஸ்வர்யா 'நியாயங்கள் ஜெயிக்கட்டும்' என்ற படத்தில் கதாநாயகியாக நடிக்கிறார். அம்மா லட்சுமி நடித்த அனைத்துப் படக் கேசெட்களையும் வாங்கிப் போட்டுப் பார்க்கிறாராம். போதாது என்று லட்சுமியும் ஐஸ்வர்யாவுக்கு நடிப்பு டியூஷன் எடுக்கிறாராம். ''காமிரா முன் வந்து நின்ற பின்புதான் அம்மாவுடைய நடிப்பின் அருமை புரிகிறது; எத்தனை கஷ்டப்பட்டு நடித்திருப்பாள்'' என்று வியக்கிறார் ஐஸ்வர்யா!

●● விசுவின் அனைத்துப் படங்களுக்கும் உதவி இயக்குனராகப் பணியாற்றி, தற்போது சுயமாக 'என் ராசாவின் மனசிலே...' என்ற படத்தினை இயக்குகிறார் கஸ்தூரி ராஜா! மதுரை மாவட்டம் மல்லிங்காபுரம் என்ற தம் சொந்த ஊரில் நடைபெற்ற உண்மைச் சம்பவத்தினை அப்படியே படமாக்குகிறார். கண்முன் நடந்த இந்தச் சம்பவம் மனசிலே சிறு வயதிலிருந்தே ஊறிக் கொண்டிருந்ததாம். ஒரு நாள் 'டேப் ரிகார்டரில்' முழுக் கதையையும் 'ஒலிச்சித்திரம்' பாணியில் தாமே பேசித் தயாரிப்பாளர் ராஜ்கிரணிடம் கொடுக்க, உடனே சான்ஸ் கிடைத்துவிட்டது.

●● விலங்குகளைச் சினிமாவில் நடிக்க வைத்து வசூல் சாதனை புரிந்த காலம் போய், தற்போது இயந்திரங்களை நடிக்க வைத்து வசூலுக்குக் கிளம்பி விட்டார்கள். 'பாட்டி சொல்லைத் தட்டாதே' படத்தில் ஒரு சூப்பர் கார் நடித்தது. தற்போது ஏவி. எம். படமான 'உலகம் பிறந்தது எனக்காக' படத்தில் மீண்டும் ஒரு சூப்பர் கார். நிலத்திலும் ஓடும்; நீரிலும் ஓடும்; குதிக்கும்; தாவும். சத்தியராஜுடன் இணையாக இந்தக் கார் நடிக்கிறது.

— எஸ். பாலு

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: ஓ. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.

# மின்னலடிக்குது அதிவெண்மை

